KALKI
.4.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் களிக்க...

ஆரம்பம்...



ளம் தரும்
வாஸ்து!

- புதிய தொடர்

"அப்பாவை
மிஞ்சிட்டேன்!"

(Diabetic) நீரிழிவு கொண்டோர்க்கு . . .




இனிப்பிற்கு

இனி தடையெதற்கு ?



## மெடிஃபைட்டா வழங்கும் ஃபைட்டோஸ்

நேச்சுரல் ஸ்வீட்னர்

# PHYTOSE

இனிமையானது... இயற்கையானது

இந்தியாவின் முதல் மூலிகை பிஸ்கட்டை அறிமுகப்படுத்திய மெடிஃபைட்டா நிறுவனத்தின் மற்றுமோர் இனிய அறிமுகம் PHYTOSE

PHYTOSE இரசாயன கலப்பற்ற முற்றிலும் இயற்கையான பழவகைகளில் இருந்து தயாரிக்கபடுவதால் PHYTOSE நீரிழிவு (Diabetic) கொண்டோர்க்கு மிக ஏற்றதாகும்.

PHYTOSE சாதாரண சக்கரையை விட 1½ மடங்கு அதிக தித்திப்பானது. ஆகையால் குறைவான அளவில் (ஒரு கப் காஃபி அல்லது டீக்கு) 3 gram மட்டுமே போதுமானது.

PHYTOSE - இன்சுலின் தேவையின்றி உடலுக்கு தேவையான சக்தியை கொஞ்சம் கொஞ்சமாக அளிக்கவல்லது. எனவே PHYTOSE நீரிழிவு (Diabetic) நோயாளிகளுக்கு பரிந்துரைக்கபடுகிறது.

Phyto Bix

## ஃ பைட்டோ பிக்ஸ்

வாய்க்கு விருந்து உடலுக்கு மருந்து

இந்தியாவின் முதல் மூலிகை பிஸ்கட்




(Diabetic) நீரிழிவு நோயாளிகளுக்காக பிரத்யேகமாக உருவானது. மைதா இன்றி சர்க்கரை இன்றி முழு கோதுமையினால் தயாரிக்கப்பட்டது. கறிவேப்பிலை, அஸ்வகந்தா, அதிமதுரம், திரிபலா, திரிகடுகம் மற்றும் மஞ்சள் போன்ற ஒப்பற்ற மூலிகைகளால் உருவாக்கப்பட்டது.

A Product of MEDIPHYTA ®

Phone: 044-55279212

Available in all leading medical shops and supermarkets

அடுத்த வாரம் முதல்...

# உங்களைத் தேடி வரும்

# தேர்தல் ஸ்பெஷல்கள்!

1 

2 

3 

சூடு...

சுவாரஸ்யம்...

சுறுசுறுப்பு...!

வளம் தரும் வாஸ்து...பக்கம் 56

'எழில்வரதனின்' அந்நியன் இன்றைய வாழ்வின் நிதர்சனம்! மனங்கள் மரங்களாகிப் போனபின் மரங்களைத் தேடி பெற்றோர் செல்வது வியப்பன்று!
**சென்னை, ரா.தேன்மொழி**

பல்வேறுபட்ட துறைகளில் 'தலைமுறை'களைக் காட்டிய தொடர் திடீரென்று முடிந்துவிட்டது ஏமாற்றம் தந்தது!
**மடிப்பாக்கம், அய்யாறு வாசுதேவன்**

'நெஞ்சாங்கூட்டில் நீயே நிற்கிறாய்' கதை அருமை. இவ்வளவு தரமான, வித்தியாசமான சிந்தனைகளைக் கொண்ட சிறுகதைகளை வேறு எந்த வொரு பத்திரிகையும் பிரசுரிப்பதாகத் தெரியவில்லை.
**கோவை - 7, ம.சங்கரி ரமேஷ்**

திருச்செல்வத்தின் 'போரடிச்ச துன்னா டீவியை நிறுத்திடுங்க!' அறிவுரை சூப்பர். இந்த வார 'கோலங்கள்' தொடரில் தொடர்ந்து பல நாட்கள் அபியின் 'அப்பா' மரணக் காட்சியை சகிக்க முடியாமல் டீவியை அணைத்து விட்டோம்!
**மும்பை, வி. வசந்தி**

கல்கியின் மேனக்காரன் கதை

# "டீ.வி.யை அணைச்சுட்டோம்!"



## வட்டமேஜை

படித்து வயிறு புண்ணாகியது.
**சென்னை-17, கோமளா ரங்கநாதன்**

கலைஞர்தான் அடுத்த முதல்வர் என மருத்துவர் ராமதாஸ் கூறியிருப்பது அவரது தீர்மானமா அல்லது மக்களின் தீர்மானமா என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.
**பெங்களூர், ப.மூர்த்தி**

கல்லைத் தூக்கித் தலையில் போட முயற்சிக்கும் அளவிற்கு காங்கிரஸில் வன்முறை வெடித்ததைப் படிக்கும் போது பகீர் என்றது.
**திருப்பரங்குன்றம்,**
**டி.கே சுப்பிரமணியன்**

வாசகர்களிடையே 'கருத்துக் கணிப்பு' என்பது சாதாரணமான விஷயமல்ல என்பதை விரிவாக எடுத்துக் கூறியுள்ள பேராசிரியர் ராஜநாயகத்தின் பேட்டி அரசியல்வாதிகளுக்கு விழிப்புணர்வு தருவதாக அமைந்துள்ளது.
**திருச்சி-21, கிரிஜா மணாளன்**



# ஃபீட் போஸ்ட்!

'உண்மையான ஆனந்தம் நம் உள்ளேயே இருக்கிறது' என்று அறிவுக்கண் திறக்கும் மாதாவின் 'அன்பெனும் மழையிலே' தொடர் ஆரம்பமே எதிர்பார்க்க வைத்துவிட்டது.

- 'சோழா' புகழேந்தி, கரியமாணிக்கம்

கவிஞர் சல்மாவின் பேட்டி சத்தானதாக மிளிர்ந்தது!

- மழைநேசன், சென்னை - 83

விஷ்ணுவர்தன் - அனு காதல் கதை ஜோர்!

- ப்ரியா, விழுப்புரம்

'அன்பழகன் அவ்வளவுதானா?' விசிட் சூப்பர்!

- நவீன், மதுரை

கியூரேட்டர் பார்த்தசாரதியின் பேட்டி, கிரிக்கெட் தெரியாத என்னைக்கூட ஆர்வத்தோடு படிக்கத் தூண்டியது.

- குமார், பொன்னை

தன் மகனுக்கு எம்.பி. பதவி தரவில்லை என்பதற்காகத்தான் ராமதாஸ் அ.தி.மு.க கூட்டணியில் இருந்து வெளியேறினார். அவர் கட்சிக்கு அங்கீகாரம் கிடைக்கச் செய்தவர் ஜெயலலிதா. இவற்றை மறைத்துவிட்டு இன்று அவர் ஜெயலலிதா பற்றிக் கூறுவது ஏற்புடையதல்ல.

திருவண்ணாமலை, என்.சண்முகம்

சோனியா காந்தியின் ராஜினாமா ஒரு நாடகம் என்பதை ஆதாரபூர்வமாகவும் அறிவியல் பூர்வமாகவும், அரசியல் ரீதியாகவும் ஆராய்ந்து எழுதியிருந்தீர்கள்.

திருச்சி, இரா.சு. பிரகாசம்

**'அட்மிஷன் ஜோக்' போட்டி முடிவு... அடுத்த இதழில்...**




**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் பேரெழுக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

**அனல் பறக்கும் பிரசாரத்துக்குத் தயாராகி வருகிறார் திருமாவளவன். காட்டுமன்னார்கோயில் தொகுதியில் நிற்கப் போவதாக ஏறக்குறைய உறுதியான நிலையில், திடீரென்று இந்தத் தேர்தலில் போட்டியிடப் போவதில்லை என்கிற முடிவை எடுத்திருக்கிறார். பிரசார பயணத்துக்குக் கிளம்பும்முன் அவர் நமக்களித்த பேட்டி...**

**என்ன சொல்லி வோட்டுக் கேட்கப் போகிறீர்கள்?**

"தி.மு.க கூட்டணியில் ஒரு கட்சிகூட தலித் கட்சி இல்லை. தலித்துகளின் வோட்டு வங்கியை வாங்கிக்கொண்டு அதிகாரப் பங்களிப்பில் தலித்துகளைப் புறக்கணிக்கும், தி.மு.க கூட்டணியைப் புறக்கணிக்கும்படி மக்களைக் கேட்டுக் கொள்வோம். 13 ஆண்டுக் காலம் ஆட்சியில் இருந்தபோது, தமிழை ஆட்சி மொழியாகவும், பயிற்று மொழியாகவும் ஆக்காத தி.மு.க.வின் தமிழ் விரோதப் போக்கைத் தோலுரித்துக் காட்டுவோம். தாழ்த்தப்பட்ட மக்களும், பிற்படுத்தப்பட்ட மக்களும் அரசியல் ரீதியாக ஒன்றுபடுவதை தி.மு.க விரும்பவில்லை என்பதையும் எடுத்துச் சொல்வோம். கலைஞர் குடும்பத்தின் ஊடக ஏகாதிபத்தியத்தில் ஊடக சுதந்திரத்துக்கும், ஜனநாயகத்துக்கும் ஏற்பட்டுள்ள ஆபத்தை விளக்குவோம். கூட்டணி வெற்றி பெற்றால் வாரிசை முதல்வராக்கத் துடிக்கும் தி.மு.க தலைவரின் சதியை முறியடிக்க வேண்டுமென மக்களைக் கேட்டுக் கொள்வோம். தமிழக மக்கள் ஒரே குடும்பமாக வாழலாம்; ஆனால் தமிழகத்தை ஒரே குடும்பம் ஆளலாமா? என்ற கேள்வியை எழுப்புவோம்."

**உங்கள் எதிரணி, அ.தி.மு.க., கடந்த ஐந்து வருடமாக மக்கள் விரோத ஆட்சி நடத்திக்கொண்டிருந்ததாகச் சொல்லுகிறது. அதற்குப் பதில் சொல்லாமல் கலைஞர் குடும்பத்தின் மீது தாக்குதலை மையப்படுத்துவது ஏன்?**

"அ.தி.மு.க ஆட்சியில் பல தலைவர்களுக்கும், மடாதிபதிகளுக்கும் அரசு ஊழியர்களுக்கும் நெருக்கடிகள் ஏற்பட்டன என்றாலும், அவற்றை மக்கள் தங்களுக்கு எதிராகப் பார்க்கவில்லை. இன்றைக்கு எங்களுக்கு மக்களிடையே உற்சாக வரவேற்பு. அதற்குக் காரணம் அ.தி.மு.க ஆட்சியில் அடித்தட்டு மக்கள் வெறுக்கக்கூடிய வகையில் அல்லது எதிர்க்கக்கூடிய வகையில் எந்த பாதிப்பும் ஏற்படவில்லை. கடந்த இரண்டாண்டுகளில் அரசு திட்டங்களும், அறிவிப்புகளும் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன. மக்கள் இதனைப் புரிந்து வைத்திருக்கிறார்கள். ஆனால், ஊடக ஏகாதிபத்தியம் காரணமாக நயவஞ்சக பிரசாரம் மூலம் மக்களை திசை திருப்பிவிட்டு குடும்ப ஆட்சியைக் கொண்டு வர நினைக்கும் கலைஞரின் சதியை முறியடிக்க வேண்டியது, தமிழகத்தின் எதிர்காலத்தை முன்னிட்டு அவசியமாகிறது."

**கலைஞரின் குடும்பத்தைப் பற்றிப் பேசுவோம் என்கிறீர்கள். முதல்வரின் அன்புத்தோழி குடும்பமும் சொத்து சேர்ப்பு உட்பட பல குற்றச்சாட்டுகளில் அடிபட்ட சர்ச்சையான குடும்பம்தானே?**

"சொந்தக் குடும்பத்துக்கும் தோழி குடும்பத்துக்கும் வேறுபாடு உள்ளது. தோழி மீதோ அவர் குடும்பத்து உறுப்பினர்கள் மீதோ, குற்றச்சாட்டுக்கள் உறுதி செய்யப்படுமேயானால் உறவை உதறி விட முடியும். ஆனால் சொந்தக் குடும்பத்தின் மீது ஊழல் நிருபணமானால் உறவுகளை உதறித் தள்ள முடியுமா?

# "இது இடைக்கால ஏற்பாடுதான்!"

இந்த வேறுபாட்டை மக்கள் புரிந்து வைத்திருக்கிறார்கள். ஜெயலலிதா அவர்களுக்குச் சொந்தக் குடும்பமும் இல்லை; வாரிசும் இல்லை என்பதை மக்கள் அறிந்தே வைத்திருக்கிறார்கள்."

**இப்போது தி.மு.க கூட்டணியைக் கடுமையாக விமர்சிக்கும் நீங்கள், முதலில் அதில் இடம் கிடைக்குமா என்று முயன்று பார்த்தீர்களே!**

"நீங்கள் சொல்வது தவறு. தி.மு.க கூட்டணியில் சேர வேண்டுமென்று விடுதலைச் சிறுத்தைகள் எந்த முயற்சியும் எடுக்கவில்லை. எங்களுடன் இருந்த தோழமையின் அடிப்படையில் பா.ம.க அதற்கான முயற்சியை மேற்கொண்டது. ஆனால் தி.மு.க தலைமையின் பிடிவாதம் காரணமாக இந்த முயற்சி வெற்றி பெறவில்லை. எனவே அரசியல் மைய நீரோட்டத்திலிருந்து எங்களைத் தனிமைப்படுத்தும் முயற்சியை முறியடிக்கும் வகையில் அ.தி.மு.கவின் அழைப்பை ஏற்றுக் கொண்டோம். எங்களை வரவேற்று, முதல் மரியாதை தந்தார் முதல்வர்."

**குடும்ப அரசியல் என்று கலைஞரை எதிர்க்கும் நீங்கள் டாக்டர் ராமதாஸ் குடும்பத்தையும் அது போன்று விமர்சிப்பீர்களா?**

"தி.மு.க கூட்டணியில் கலைஞர் தான் தலைவர். அந்த வகையில் அவரது அணுகுமுறையைத்தான விவாதிக்க வேண்டியுள்ளது. ஆனால் அதற்காக பா.ம.கவைப் பற்றி பேசவே கூடாது என்பதல்ல. எங்கள் பிரசாரம் முதன்மையாக தி.மு.க பற்றிய விமர்சனமாகத்தான் இருக்கும்."

**தமிழ்ப் பாதுகாப்பு தளத்தில் பா.ம.கவுடன் தோழமையாக இருந்த நீங்கள், இப்போது அரசியல் ரீதியாக எதிர் முகாமில் இருக்கிறீர்கள். இந்த நிலையில் நீங்களும், பா.ம.கவும் மோதும் முகையூர்**



தொகுதியில் அனல் பறக்குமா?

"தாயும் பிள்ளையும் ஒன்று என்றாலும் வாயும் வயிறும் வேறு. நாங்கள் எங்கள் பாதுகாப்பை உறுதிப்படுத்திக் கொண்டு உறவுகளைத் தீர்மானித்துக் கொண்டுதான் களத்தில் சந்திக்கிறோம். நட்புக்காகத் தோல்வியைத் தழுவ முடியாது."



**ஜெயலலிதா ஜனநாயக அணுகுமுறைகளை விரும்பாதவர் என்று சொல்லப்படும் குற்றச் சாட்டுகள் பற்றி?**

"தேர்தல் கூட்டணி என்பது அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்வதற்கான இடைக்கால ஏற்பாடுதான். அதற்கும் கொள்கை, கோட்பாடுகளுக்கும் முடிச்சுப் போட்டுப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. எங்களைப் பொறுத்தவரையில் முதல்வர் அவர்கள் தனிநபர்களையும், ஜனநாயகத்தையும் மிகவும் மதிப்பதாகவே கருதுகிறோம். மதிப்பைக் கொடுத்து மதிப்பைப் பெறுகிற இடத்தில் ஜனநாயகத்துக்கு எந்தப் பாதிப்பும் இருக்காது."

## "தோல்வி பயம் எனக்கு இல்லை!"

**'ஈழப் பிரச்னையைப் பற்றியே பேசக்கூடாது' என்று நிபந்தனையின் அடிப்படையில்தான் அ.தி.மு.க உங்களுடன் கூட்டணி அமைத்ததா?**

"நீங்கள் சொல்வது தவறு. நாங்கள் ஈழத் தமிழர்களுக்கு ஆதரவாளர்கள் என்பதை அறிந்துதான் எங்களோடு கூட்டணி வைத்திருக்கிறது அ.தி.மு.க. இதன்மூலம் அந்தக் கட்சியும் ஈழத் தமிழர்களுக்கு எதிரான இயக்கம் அல்ல என்று அறிந்துகொள்ள முடியும். மேலும் எங்கள் கொள்கை கோட்பாடுகளில் அ.தி.மு.க ஒருபோதும் தலையிடாது.



**நீங்கள் ஏன் தேர்தலில் நிற்கவில்லை; தோல்வி பயமா?**

"எங்களுக்குக் கொடுக்கப்பட்ட ஒன்பது தொகுதிகளில் போட்டியிட 500க்கும் மேற்பட்டவர்கள் மனு செய்தார்கள். நான் போட்டியிடுவதைத் தவிர்த்ததன் மூலம் சீட்டு கிடைக்காத எங்கள் தோழர்களை ஆறுதல்படுத்த முடிந்தது. அவர்களும் 'பொதுச்செயலாளரே போட்டியிடவில்லை' என்று தங்களைச் சமாதானப்படுத்திக் கொண்டார்கள். இது தவிர தமிழகம் முழுதும் சென்று பிரசாரம் செய்ய வேண்டும். தேர்தல் தேதிக்கு பத்து நாட்களுக்கு முன்புதான் எங்களுக்குச் சின்னம் ஒதுக்கப்படும். அதை ஒன்பது தொகுதிகளிலும் மக்கள் கவனத்துக்கு, குறுகிய காலத்தில் எடுத்துச் செல்ல வேண்டும். இந்தக் காரணங்களுக்காக போட்டியிடவில்லையே தவிர, தோல்வி பயத்தில் அல்ல."

**தி.மு.க வெற்றி பெற்று ஆட்சியமைத்தால் தங்களை சட்டசபையில் உண்டு இல்லையென்று பண்ணிவிடுவார்கள் என்கிற பயத்தின் காரணமாகத்தான் நீங்களும் வைகோவும் தேர்தலில் போட்டியிட மறுக்கிறீர்களா?**

"அதீத கற்பனை!"

- ப்ரியன்

படங்கள் : ஸ்ரீஹரி

# சென்னை இப்ப உங்கள் கையில் !






 24 மணி நேர இலவச சேவை

 சென்னையைப் பற்றிய அனைத்து விபரங்களும்

 உடனடித் தகவல்

 நீங்கள் விரும்பும் முக்கிய தொலைபேசி எண்கள்

ரெஸ்டாரண்ட், கேட்டரர்ஸ், திரையரங்குகள், மருத்துவமனைகள், பில்டர்ஸ், கம்ப்யூட்டர், ஷோரும், கூரியர், டிராவல் சர்வீஸஸ், கல்யாண மண்டபங்கள், கால் டாக்ஸி, ஷாப்பிங் மால்ஸ், கன்சல்டன்ட், மொபைல் போன், பேக்கர்ஸ் & மூவர்ஸ், கிரடிட் கார்டு, கடன் உதவிகள், ஹெல்த் & பிட்னஸ் சென்டர், ஆபிஸ் ஆட்டோமேஷன், கோச்சிங் வகுப்புகள், டெக்ஸ்டைல் & ஜீவல்லரி - மற்றும் சென்னையை பற்றிய அனைத்து தகவல்களுக்கும். . .




## உங்கள் உலோகப் பொருட்கள் என்றும் பொலிவுடன் விளங்க




24 ct GOLD PLATED GIFTS






**Show room:**

Next to jeeva park old # 85 G.N.Chetty Road, T.Nagar, Chennai - 17

Tel:28156370 Mobile 9840021384, 94443 88037

Timing:9.30 am to 7.00 pm SUNDAY HOLIDAY

for online purchase please visit:

www.chennaionline.com,www.indiavarta.com www.sifymall.com

## எங்களிடம் 24ct கோல்டு பிளேட்டடு விக்ரகங்களும் கிடைக்கும்

அப்பாவா? பிள்ளையா? அண்ணனா? தம்பியா? என வியக்க வைக்கிற சத்யராஜ் - சிபி கூட்டணிக்கு கோடம்பாக்கத்தில் ஏக வரவேற்பு! 'கோவை பிரதர்ஸ்' பட வெற்றிக் களிப்பில் உற்சாகமாக இருந்தவரோடு பேசினோம்...

# "அப்பாவை மிஞ்சிட்டேன்!"

**வாரிசு நடிகராக சினிமாவில் ஜெயிப்பதில் என்ன சுவாரஸ்யம் இருந்துவிடப் போகிறது?**

"என்ன இப்படிச் சொல்லிட்டீங்க? சினிமாவுக்குள் நுழையறது மட்டும்தான் ஈஸி. ஏதோ ஒரு புதுமுகத்தைப் போட்டு படமெடுக்கறதைவிட பிரபல நடிகரோட பையன்னா ரசிகர்கள் மத்தியிலே ஒரு எதிர்பார்ப்பு வந்துடும்னு வாய்ப்பைக் கையில் தூக்கிக் கொடுத்துடறாங்க. ஆனால் குருவி தலையிலே பனங்காய் வச்சமாதிரி பல வாரிசுகள் தடுமாறிப் போயிடுறாங்க. எனக்கும் கூட அந்தத் தடுமாற்றம் ஆரம்பத்துல இருந்துச்சு. அதுக்குக் காரணம் இல்லாமல் இல்லே! என்னதான் நாம நல்லாப் பண்ணியிருந்தாலும் அப்பாவோட நம்மளை ஒப்பிட்டுப் பார்ப்பாங்க. பலதரப்பட்ட விமர்சனங்கள் வரும். தாங்கிக்கிட்டு ஓடிப்போயிறாம தாக்குப்பிடிக்கணும். இதைவிடப் பெரிய சவால், முப்பது வருஷமா அப்பா சம்பாதிச்சு வெச்சிருக்கிற பெயரைக் காப்பாத்தணும். 'கோவை பிரதர்ஸ்' படத்துல பல சீன்கள்ல அப்பாவை மிஞ்சிட்டேன்னு எல்லாத் தரப்பிலேர்ந்தும் பாராட்டுறாங்க. 'ஜோர்', 'மண்ணின் மைந்தன்' படங்கள்லே இந்தப் பேர் கிடைக்கலே. ரொம்ப த்ரில்லா ஃபீல் பண்றேன்."

**அப்பா-மகன் ஜோடி அடுத்தடுத்து வெற்றி பெறும் காரணத்துக்காகத் தொடர்ந்து அப்பா முதுகுக்கு மேலேயே சவாரி செய்ய நினைப்பது சரியா?**

"இதுக்கு நானோ அப்பாவோ காரணமில்லை! நூறு கதைகள் வந்தால் அதுல, தொண்ணூறு அப்பாவையும் என்னையும் மனசுல வெச்சு பண்ணின கதைகளாகத்தான் இருக்கு. அதிலிருந்து வடிகட்டித்தான் பண்றோம். ஆனால் அப்பா ஹீரோ மட்டுமில்ல, குணச்சித்திர நடிப்புலயும் அவர் நம்பர் ஒன். இப்போ நாங்க ரெண்டுபேரும் சேர்ந்து பண்ற படங்கள்ல அவர் கேரக்டர் ஆர்ட்டிஸ்டாத்தான் வர்றார். நான்தான் ஹீரோவா இருக்கேன். கோவை பிரதர்ஸ்ல இரண்டு பேருக்கும் சம முக்கியத்துவமுள்ள கேரக்டர்ஸ். இப்போ அப்பா முதுகிலேருந்து இறங்கி 'பட்டாசு', 'மாமு'ன்னு ரெண்டு படங்கள் பண்றேன். அப்படியும் என்னையும் அப்பாவையும் விடமாட்டேங்கறாங்க..."

**உங்களுக்குப் பின்னால் அறிமுகமான உங்கள் வயசு ஹீரோக்கள் பரத், ஆர்யா போன்றவர்கள் கிடுகிடுவென்று மேலே போய்க் கொண்டிருக்கிறார்களே?**

"சினிமாவுக்குள்ளே நுழைஞ்சு ஐந்து வருஷமாச்சு! வருஷத்துக்கு ஒண்ணுன்னு ஐந்து படம்தான் பண்ணியிருக்கேன். நினைச்சிருந்தா வருஷத்துக்கு மூணு படம்கூட பண்ணியிருக்கலாம். அதில விருப்பமில்லே. விக்ரமுக்கு ஒரு 'சேது' கிடைக்கிறதுக்கு பதினைஞ்சு வருஷமாச்சு. விஜய்க்கு ஒரு 'பூவே உனக்காக', சூர்யாவுக்கு ஒரு 'நந்தா', அஜீத்துக்கு ஒரு 'காதல் கோட்டை'ன்னு அறிமுகமாகி ஆறேழு வருஷம் கழிச்சுத்தான் அவங்களுக்கு பிரேக் கிடைச்சிருக்கு. இப்போ இவங்க மார்க்கெட் நிலவரமெல்லாம் ரொம்ப ஸ்டெடி. வேகவேகமா மேலே போறேன்னு தடுக்கி விழுந்து முட்டியப் பேத்துக்கிறத விட, நிதானமா மலையேறணும்ங்க! அதுதான் நிலையான வளர்ச்சியா இருக்கும்."

**தமது திரைப்படங்களில் தவறாமல் பகுத்தறிவுப் பிரசாரம் செய்வதை வழக்கமாக வைத்திருப்பவர் உங்கள் அப்பா. அந்தப் பணியை நீங்கள் எப்போது கையிலெடுக்கப் போகிறீர்கள்?**

"அதற்கு ஒரு மெச்சூரிட்டி வேணும். வயசும் போதாது. அதுக்கு முன்னாடி பெரியாரை முழுசாப் படிக்கணும். அம்பேத்கர், மார்க்ஸ் இவங்களையும் படிக்கணும். கடவுள் மறுப்புக் கொள்கையைப் பத்தி பிரசாரம் செய்யுறதைவிட, கடவுள் மறுப்பாளனாக வாழ்ந்து காட்டுறதும், தனிப்பட்ட வாழ்க்கை, பொது வாழ்க்கை இரண்டுலேயுமே ஒரு சக்ஸஸ்ஃபுல் ரோல் மாடலாக நம்மை நிலை நிறுத்திக்கிறதுதான் ஒரு பகுத்தறிவுவாதிக்கு ரொம்ப முக்கியமான விஷயம். முதல்ல தொழில்! அப்புறம்தான் உபதேசமெல்லாம்."

**சமீபத்தில் உங்களை நெகிழ வைத்த பாராட்டு யாருடையது?**

'வெற்றிவேல் சக்திவேல்' படத்தில் வடிவேலு அண்ணனோடு நிறைய காட்சிகள்ல இணைஞ்சு நடிச்சிருந்தேன். படம் முடிஞ்சதும் கூப்பிட்டுச் சொன்னார். 'உன் வயசு ஹீரோக்கள் கூட நடிச்சிட்டேன். உங்க அப்பா, பார்த்திபன் சார், விஜய் சார் இவங்ககிட்ட பார்த்த அதே டைமிங் சென்ஸ், காமெடியிலே உங்கிட்டேயும் இருக்கு'ன்னு பாராட்டினார். ஒரு ப்ருவ்டு காமெடி ஆர்ட்டிஸ்ட் இப்படிச் சொன்னதும் அவ்வளவு சீக்கிரம் கலங்காத நான், சட்டுன்னு கலங்கிட்டேன்.'

**ஒரு திரைப்படத்தின் இசை வெளியீட்டு விழாவில் 'நமீதாவும் எனது மருமகள்தான், கஜாலாவும் எனது மருமகள்தான்' என்று உங்கள் அப்பா பேசினார். உண்மையில் நீங்கள் காதலிப்பது கஜாலாவைத்தானே?**

"இரண்டு பேரையுமே வேறு வேறு படங்களுக்காகக் காதலிச்சேன். அடுத்து 'மாமு' படத்துக்காக லட்சுமிராயைக் காதலிக்கப் போறேன். கஜாலா, நமீதா, ஷெரின் இப்படி என்னோட நடிச்ச கதாநாயகிகள் எல்லோருமே எனக்கு பெஸ்ட் ஃப்ரெண்ட்ஸ். எல்லோருமே என் வீட்டுக்கு வந்திருக்காங்க. எனது தங்கையோட தோழி, நடிகை அபர்ணாவும் எனக்கு நல்ல ஃப்ரெண்ட். அவங்க வீட்டு பிரியாணி செம சூப்பரா இருக்கும்.

நிஜத்துல காதல் பிடிக்காதுன்னு இல்லே... இப்போ மேக்ஸிமம் கடலை போடுறதுதான் காதல்னு ஆகிப் போச்சு... இந்தக் கலாசாரம் மாறுதான்னு பார்ப்போம்."

**- ஆர்.சி.ஜெயந்தன்**

அட்டை, படம் : **புதூர் சரவணன்**





# அமைதி வெடிகுண்டு!

'அதோ இருக்கிறான் எதிரி ஃபயர்...' 'டமால் டுமீல்' 'டிஷ்யூம்' சத்தங்களோடு வாள், கத்தி, கையெறி குண்டு, வெடிகுண்டு, கண்ணிவெடி, அணுகுண்டுவரை புழங்கும் இடம்... வேறென்ன வீடியோ கேம்ஸ்தான். 'இதெல்லாம் வேண்டாம்பா. வன்முறை ரொம்ப ரொம்ப கூடிப்போச்சு. உலக அமைதிக்காக ஒரு கேம்ஸை உருவாக்குவோம்' என உறுதிமொழி எடுத்து அழகாக, அமைதியாக 'சைலன்ஸ் பாம்' என்றொரு கேமைத் தயாரித்து, இந்த முயற்சியை உலக அமைதிக்கான நோபல் பரிசுக்கும் விண்ணப்பித்துள்ளார்கள். Keita Takahashi, Cliff Bleszinski, Harvey Smith - இந்த மூவரும்தான் இந்த கேமை வடிவமைத்தவர்கள். இந்த கேமை ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் விளையாடலாம். மரம் வளர்த்தல், தெருக்களைச் சுத்தம் செய்தல், பண உதவி செய்தல், பிறருக்கு உதவி செய்தல் போன்ற விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு அமைதியாக, அதேநேரத்தில் சுவாரஸ்யமாகச் செல்கிறது. குழந்தைகளின் மனத்தில் அன்பை விதைக்க மிகவும் தேவையான விளையாட்டு இது! (www.techtree.com-ன் செய்திகளிலிருந்து.)

### புகைப்படங்களின் சொர்க்கம்!

அழகான, அற்புதமான, நல்ல resolution கொண்ட கிரியேட்டிவான புகைப்படங்கள் வேண்டுமா? உங்கள் விரல்கள் டைப் பண்ண




வேண்டிய தளம் www.corbis.com. இலவசமாகப் பதிவு செய்துகொண்டால் வாட்டர்மார்க் இல்லாத அருமையான படங்களைப் பெறலாம்.

### டௌன்லோட் :

நீங்கள் ஹிந்தியில் அதுவும் யுனிகோடில் டைப் செய்ய வேண்டுமா, மத்யம் என்ற ஹிந்தி வேர்ட் ப்ராசஸர் வந்துள்ளது. இதன் மூலம் ஹிந்தி மட்டுமல்ல... மராத்தி, சமஸ்கிருதம், நேபாளி, கொங்கனி மொழிகளிலும் டைப் செய்யலாம். (டௌன்லோட் செய்ய: www.freewarefiles.com/Program _8 _ 213_12235.html)

- முகில்

**ஸர்ச் என்ஜின்**



# ஒற்றன்

இந்தத் தடவை கலைஞரு, தான் போட்டியிடுற சேப்பாக்கம் தொகுதிக்குள்ள இருக்குற ஒரு இண்டு இடுக்கு விடாம எல்லாத் தெருவுக்கும் போயி வோட்டுக் கேட்கறதா முடிவே கட்டிட்டாரு போலப்பு. அதனால நிறைய நாள் தொகுதிக்கு ஒதுக்கியிருக்காரு. பிளான் பண்ணினபடி, போன திங்கட்கிழமையே சேப்பாக்கத்துக்கு வோட்டு வேட்டையாட பேரன் தயாநிதி சகிதம் ஜீப்புல கௌம்பிட்டாரு.

வழக்கமா இந்த ஏரியாவுல பிரசாரம் பண்ண வர்றவங்களுக்கு அடுக்குமாடி குடியிருப்புல இருக்கறவங்க உதிரிப் பூக்களைத் தூவி விடுவாங்க. அதேமாதிரி கலைஞருக்கும் தூவினாங்க. தாத்தா மேல விழுற பூக்களை வலிக்காம, அழகா எடுத்து கீழே போட்டுக்கிட்டு இருந்தாரு தயாநிதி.

அப்பப்போ மைக்கில் பேசின கலைஞர், தேர்தல் அறிக்கையில இருக்குற கலர் டி.வி, ரெண்டு ரூபாய்க்கு அரிசி மேட்டரு எல்லாத்துக்கும் விளக்கம் கொடுத்துக்கிட்டே போனாரு... தொண்டருங்க பேச்சு முழுக்க ராஜினாமா செஞ்ச சரத்குமாரைப் பத்தித்தான் இருந்துச்சு...

"யோவ்... பொதுவா நடிகன்னாலே நம்ம முதுகுல குத்திட்டுத்தான் போவானுங்க. சரத்தும் அதுக்கு விதிவிலக்கில்ல"ன்னு ஒரு உடன்பிறப்பு பேச, "அட... மத்தவங்களை விடுங்கண்ணே... இவரு தலைவருக்கு லெட்டரு எழுதியிருக்காரே... அதுல நாலைஞ்சு வரி மிஸ் ஆகுதே... நெல்லையில தோக்கடிச்சுட்டாங்கன்னு எழுதினவரு, அப்பால டெல்லிக்கு அனுப்பினதை வசதியா எழுதாம வுட்டுப் புட்டாரே..."ன்னு இன்னொருத்தர் சொன்னாரு.

"அத வுடுய்யா... இந்த லெட்டரையே கட்சி மெம்பர்ல இருந்து ராஜினாமா வாவும் வச்சிக்கோங்கன்னு சொன்னவரு, அப்படியே எம்.பி பதவியை ராஜினாமா பண்ணி ஜனாதிபதிக்கு கடிதம் அனுப்பிட்டேன்னு எழுதியிருந்தாருன்னா நல்ல மனுஷன். அதை விட்டுட்டுப் பேசறாரு..."

தெருவுல நின்னுக்கிட்டு இருந்த ஒரு முஸ்லிம் அம்மாகிட்ட பேச்சு கொடுத்தேன். "ஏம்மா... திரும்பவும் கலைஞர் ஜெயிச்சுடுவாரா..."

"போன தடவை தாமரைக் கட்சி கலைஞர் கூட இருந்துச்சு. அதனால நான் சூரியனுக்குப் போடல... இந்தத் தடவை ரெண்டு பேர் கூடவும் தாமரைக் கட்சி இல்ல... அதனால இலைக்கு வோட்டுப் போடறதா... இல்ல... கலைஞருக்குப் போடறதான்னு குழப்பமா இருக்கு."

இது எப்படி இருக்கு! ●



• படம் : ஸ்ரீனி

# கலைஞர் ஜெயிப்பாரா?

“பல கட்சிகள் ஒன்றிணைந்து கூட்டணி ஆட்சி நடத்த மிகமிக முக்கியமானது குறைந்தபட்ச பொதுத் திட்டம். அதுபோல இணைக்கப்பட்ட, பிணைக்கப்பட்ட எலும்புகள் உரசிக் கொள்ளாமல் இருக்க இயற்கை நமக்கு வழங்கிய கொடைதான் எலும்பு மஜ்ஜை. முதுகுவலி, தோள்பட்டை வலி, இடுப்பு வலி என்று வந்தால் எலும்புகளின் கூட்டணியில் பிரச்னை என்று அர்த்தம். இதை வலி நிவாரணி கொண்டு சமாளித்தபடி, ‘குடும்ப பாரத்தை முதுகிலும், தோளிலும் சுமக்கும் என்னை, இந்த வலிகள் என்ன செய்துவிடும்?’ என்று அலட்சியம் செய்தால் ஆளையே முடக்கிப் போட்டுவிடும்” என்கிறார் சென்னை நந்தனம் அப்பல்லோ மருத்துவமனையின் மூட்டு மாற்று அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் விஜய் சி. போஸ்.

எலும்புகளின் இணைப்புகள் மற்றும் மூட்டுக்களுக்கு இடையில் கடுமையான வேலை காரணமாக அசைவுகள் அதிகரிக்கும்போது, எலும்பு மஜ்ஜை தேய்ந்து எலும்பும் எலும்பும் உரசிக் கொள்ளும்போது கடுமையான வலியில் துடிக்க வேண்டி வருகிறது. உடல் உறுப்புகளின் கட்டமைப்பை ஒரு சட்டம்போல இருந்து அடிப்படை ஆதாரமாகத் தாங்கும் எலும்புகளில் மிக முக்கியமான மூன்று பகுதிகள் முதுகெலும்பு, தோள்பட்டை எலும்பு மற்றும் பெல்விக் எனப்படும் இடுப்பெலும்பு ஆகியன. இவற்றில் இணைப்புகள் மட்டும் மூட்டுகளின் இடையில் இருக்கும் நரம்புகள், எலும்புகளின் உரசல் மற்றும் அழுத்தம் காரணமாகச் சம்பந்தமில்லாத இடங்களில்கூட வலி ஏற்படும். இடுப்புவலி, முதுகுவலி, தோள்பட்டை வலி என ஆரம்பித்து மைக்ரேன் தலைவலிகூட ஏற்படலாம்.

எலும்புகளின் இணைப்புகள் மற்றும் மூட்டுக்களில் தேய்மானம் ஏற்பட பல காரணங்கள் உள்ளன. முதலில் இடுப்பு வலி மற்றும் முதுகுவலியில் அதிகம் சிக்குவது

# எலும்புகளின்



* டாக்டர் விஜய் சி. போஸ்.



நடுத்தரவயது ஆண்கள்தான். இதில் இடுப்பு மூட்டுவலி, இடுப்பின் கீழ்பாகத்தில் தொடங்கும். நடக்கும் தூரம் படிப்படியாகக் குறையும். பிறகு தூக்கத்தின்போதும் இடுப்பில் வலி உண்டாகும். இன்னும் சிலருக்குக் கால் பிடிப்பு ஏற்படலாம். மெல்ல மெல்ல இடுப்பு மூட்டில் தேய்மானம் நடைபெற ஆரம்பிப்பதால் டூவிலர் ஓட்டுவதில் சிரமம் ஏற்படும். இந்திய முறை டாய்லெட்டைப் பயன்படுத்த முடியாது. இடுப்பு மூட்டின் தேய்மானம் காரணமாக முதுகெலும்பின் டிஸ்குகளிலும் தேய்மானம் ஏற்படலாம். டூவிலரின் ஷாக் அப்சார்பர்களை அதிக வருடங்கள் பயன்படுத்துவது, சீட் அமைப்பு சரியில்லாதது, சாலையின் தரத்தை கவனத்தில் கொண்டு ஓட்டாமல் அதிக வேகத்தில் ஓட்டுவது போன்றவையே இன்றைய இளைய மற்றும் நடுத்தர வயதினரின் முதுகெலும்பு டிஸ்குகளில் தேய்மானம் ஏற்பட முக்கியக் காரணங்களாக இருக்கின்றன.

தோள்பட்டை மூட்டுத் தேய்மானத்துக்கு அதிகம் ஆளாவது பெண்கள்தான். என்றாலும் ஆண்களுக்கும்

இந்தப் பிரச்னை ஏற்படவே செய்கிறது. குறிப்பாக டென்னிஸ், கூடைப் பந்து, கோல்ஃப், கிரிக்கெட் வீரர், வீராங்கனைகள் மத்தியில் தோள்பட்டை மூட்டுத் தேய்மானம் அதிகம் ஏற்படுகிறது. முதியவர்கள் எனில் தோள்பட்டை மூட்டுக்கள் இடையே உள்ள தசைகள் பலவீனம் அடைந்தால் வரும். தோள்பட்டையில் சிலருக்கு கால்ஷியம் சேர்ந்துவிடுவதாலும் வரலாம்.

"எலும்பு இணைப்புகள், மூட்டுகள் இடையே ஏற்படும் தேய்மானத்தை ஆரம்பத்திலேயே கண்டறிய ஒரே ஒரு எக்ஸ்ரே போதும். ஆரம்பத்திலேயே கண்டறிந்துவிட்



# கூட்டணிக்கு எதிரி!

டால் மருந்துகள், பெல்ட்கள் அணிதல் மூலம் பலன் பெறலாம். மாறாக வலி நிவாரணியே கதி என்று இருந்துவிட்டு, நோய் தீவிரமடைந்த பிறகு மருத்துவரை அணுகும்போது எடுத்த எடுப்பிலேயே 'சர்ஜரி வேண்டாம். புற நோயாளியாகவே அனுப்பிவிடுங்கள்' என்கிறார்கள். இதற்குக் காரணம் ஆபரேஷன் பற்றிய பயம். ஆபரேஷன் என்றால் பெரிய காயங்கள் உண்டாகும்; தையல்கள் போடுவார்கள்; மிகுந்த வலி உண்டாகும் என்று பின்வாங்கி விடுவார்கள். தற்போது அந்தப் பயத்தைத் தவிடுபொடியாக்கிவிட்டது கீ ஹோல் சர்ஜரி. அதாவது 0.5 செண்டிமீட்டர் அளவுடைய சிறிய துவாரத்தின் மூலம் கம்ப்யூட்டர் திரையில் பார்த்தபடி தோள்பட்டை மற்றும் இடுப்பில் மூட்டு மாற்று அறுவை சிகிச்சைகள் மேற்கொள்கிறோம். இதில் இரத்த இழப்பு மிகக் குறைவு என்பது ஒரு பக்கம் இருக்க, இடுப்பு மூட்டை முழுவதுமாக நீக்கிவிடாமல் அதன் இயற்கையான அமைப்பை அப்படியே வைத்துவிடுகிறோம். அச்சு அசலாக மெட்டல் பந்தும், அது சிரமமில்லாமல் உருளுவதற்கான மெட்டல் குழியையும் பொருத்திவிடுகிறோம். இது மூட்டின் வேலையை நூறு சதவிகிதம் செய்கிறது. ஆபரேஷனைக் கண்டு மிரளும் இளைஞர்கள், நடுத்தர வயதினருக்கு இந்த ரீசர்பேஸிங் தொழில்நுட்பம் ஒரு வரப்பிரசாதமாகத் திகழ்கிறது. இது அமெரிக்கர்களையும் சென்னைக்கு வரவழைத்துக் கொண்டிருக்கிறது" எனும் டாக்டர் போஸ், மூட்டுக்கள் தேயும் வரை காத்திருப்பது புத்திசாலித்தனம் அல்ல என்று அறிவுறுத்துகிறார்.

- ஸ்ரீசக்கரம்



# கல்கி




2006 ஏப்ரல் 23
விய சித்திரை 10
மலர் : 64
இதழ் : 38


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

- பாரதியார்.

## தேர்தல் ஷோ!

**தி**.மு.கவில் சீட் தரவில்லையா... அ.தி.மு.கவுக்குப் போய்விடு; அ.தி.மு.கவில் சீட் தரவில்லையா... தி.மு.கவுக்கு ஓடு! இதுதான் இன்று தேர்தல் டிரெண்ட்! கோபித்துக் கொண்டு போய்ச் சேர்கிற கட்சியில் டிக்கெட் கிடைக்காவிட்டால் என்ன.. பேப்பரில் போட்டோவுடன் செய்தி வெளியாக, டிக்கெட் மறுத்த கட்சியைப் பழி வாங்கியாகிவிட்டதல்லவா! இதைவிட வீர தீர பராக்கிரமம் நிறைந்த அரசியல் சேவை வேறென்ன இருக்க முடியும்!

தி.மு.கவுக்குள் பாக்யராஜ், சேடப்பட்டி என்று புதுமுகங்கள் புக, அங்கிருந்து வெளியேறிய நிர்மலா சுரேஷ், திருவாரூர் எம்.எல்.ஏ. அசோகன் போன்றோர் அம்மா புகழ்பாட அ.தி.மு.கவுக்குப் போகிறார்கள். 'நான் என்ன செய்தேன் நாட்டுக்கு?' என்று பத்தாம் பசலித்தனமாக யோசித்துக் கொண்டிராமல், 'இந்தக் கட்சி என்ன செய்தது எனக்கு?' என்று சிந்தித்துத் தங்களை முன்னேற்றிக் கொள்ளும் இவர்களல்லவா முற்போக்குவாதிகள்!

தமது ரசிகர் மன்றத்தினருக்கு வேட்பாளர் வாய்ப்புத் தரப் படாததால் சரத்குமார் தி.மு.கவை விட்டு வெளியேறுகிறார். அக்கட்சியில் கருத்துச் சுதந்திரம் இல்லை என்று இப்போது புலம்புபவருக்கு ராஜ்ய சபா எம்.பி. பதவியை ஏற்றபோது அந்த உண்மை தெரிந்திருக்கவில்லை என்றால், அதற்கு அவரா பொறுப்பாக முடியும்? அவரை எம்.பியாக நியமித்த தலைமைதானே பொறுப்பு!

இப்படி ஆயா ராம்கள் கயா ராம்களாக தமிழக அரசியல் பிரமுகர்கள் அணி மாறி - கட்சி மாறி நடைபோடும் கேளிக்கையைப் பார்த்துவிட்டு சினிமா துறையினர் சும்மா இருப்பார்களா? வெள்ளித்




திரையிலிருந்து கட்சிப் பிரசாரத்துக்குப் பளபளப்பைச் சுமந்து வருகிற நடிகைகளின் அணிவகுப்பு அட்ராக்ஷன் கண்ணைப் பறிக்கிறது! சினிமாவில் டப்பிங் ஆர்டிஸ்ட் இன்றிச் சுயமாக வசனம் பேசும் ஆற்றல் இவர்களுக்கு இல்லாவிட்டால் என்ன? அரசியல் மேடைகளில் 'இவர்கல் கொட்டி முளக்கி நமது பொன்னான வாக்குகலை அல்லிக்கொல்லாமலா' போய் விடுவார்கள்!

பிரசார பீரங்கிகளும் பரிவார தேவதைகளும் கலக்குகிற கலக்கில் நாம் இருக்கும் இடம் தெரியாமல் போய்விடப் போகிறதே என்று அனைத்து அரசியல் கட்சித் தலைவர்களும் வரிந்து கட்டிக் கொண்டிருக்கிறார்கள். மெகா சீரியல் ரேஞ்சில் மூளைச் சலவை செய்யும் தேர்தல் அறிக்கைகளையும் வாக்குறுதிகளையும் வெளியிட்டு வருகிறார்கள். இலவச கலர் டி.வி என்கிற இமாலய புரட்சியைத் தாங்கி வரும் தி.மு.க. அறிக்கை, ஒரு மெகா பட்ஜெட் கனவு சீனைக் காட்சிப்படுத்த... அ.தி.மு.க. அறிக்கைகள் மத்திய அமைச்சர்களையும் தேர்தல் கமிஷனையும் எதிர்த்துச் சீறிப் பாயும் ஸ்டண்ட் சீனாகத் திகழ, ம.தி.மு.க. அறிக்கை மீனுக்குத் தலையாகவும் பாம்புக்கு வாலாகவும் காமெடி டிராக் காட்ட, தே.மு.தி.க. அறிக்கை வீடு தேடி வரும் ரேஷன் செண்டிமெண்ட் காட்டி இலவச அரிசி மழை பொழிய, பா.ஜ.க. அறிக்கை கிளைமேக்ஸாகச் சங்குபிடித்து ஊதுகிறது கள்ளுக்கடைகளைத் திறக்கப்போவதாக!

இப்படி எல்லா கட்சிகளும் தலைவர்களும் ஷோ காட்டிக் கொண்டிருக்க, தேர்தல் களம் ரஜினி படத்தைத் தூக்கிச் சாப்பிடும் கேளிக்கை அம்சங்களுடன் மின்னிக் கொண்டிருக்கிறது.

'அது சரி, தமிழ்நாடு முன்னேற வேண்டாமா?' என்று சீரியஸாகக் கேட்கும் அப்பாவிகளுக்கு பதில் இருக்கிறது:

யார் ஆட்சிக்கு வந்தாலும் அள்ளிவிடப் போகும் இலவசங்களுக்குத் தமிழக ஏழை - பாழைகள்தானே உழைத்துக் களைத்து கூடுதல் வரி செலுத்த வேண்டும். உழைத்த களைப்பில் தாங்கள் ஏழைகள் என்பதுகூட அவர்களுக்கு மறந்துபோய்விடாதா என்ன? அந்த ஏழைகள் பரம ஏழைகளாகவே தொடர, தமிழக அரசியல்வாதிகளும் அவர்களுக்குக் கறுப்புப் பணம் அருளும் தமிழக தொழில் - வர்த்தக முதலைகளும் முன்னேறத்தானே போகிறார்கள்! ○

# "தி.மு.க.விலிருந்து உதவியை எதிர்பார்க்கிறேன்!"



எம்.ஜி.ஆரின் கலையுலக வாரிசு என்று சொல்லப்பட்ட பாக்யராஜ், அண்மையில் தி.மு.கவில் சேர்ந்து பிரசாரத்துக்கும் கிளம்பத் தயாராகிவிட்டார். அவரைச் சந்தித்தோம்.

**நீங்கள் தி.மு.கவில் சேர்ந்ததற்காகச் சொல்லுகிற காரணங்கள் எல்லாமே எதிர்கட்சிகள் பல நாட்களாகச் சொல்லிக் கொண்டிருப்பவைதான். ஆனால் இந்த திடீர் முடிவுக்கு உண்மையான பின்னணி என்ன?**

"எம்.ஜி.ஆர். காலத்தில் அவரோடு கட்சியில் இருந்தவர்கள் தொடர்ந்து ஜெயலலிதாவால் புறக்கணிக்கப்படுகிறார்கள். எம்.ஜி.ஆர். பெயரே இருட்டடிப்பு செய்யப்படுகிறது. மக்கள் படும் கஷ்டங்கள் கொஞ்சநஞ்சமில்லை. அ.தி.மு.க. வேட்பாளர் பட்டியலைப் பார்த்தபோது, கட்சிக்காக உழைத்தவர்களுக்கு உரிய மரியாதை தரப்படாததைப் பார்த்தேன். கலைஞர் ஆட்சிக்கு வந்தால் மக்களுக்கு நல்லது செய்வார் என்று எனக்குத் தோன்றியது. அதைத் தனியாளாக இருந்துகொண்டு சொல்லுவதைவிட, ஒரு அரசியல் கட்சியில் சேர்ந்து சொல்வது பெட்டர் என்று நினைத்தேன். தி.மு.கவில் சேர்ந்தேன்."

**அரசியல் ரீதியாக நீங்கள் எடுத்த இந்த முடிவு, பொருளாதார ரீதியாக உங்களுக்கு எந்த அளவுக்குப் பயன் அளிக்கப்போகிறது?**

"எனக்கு கடந்த ஏழெட்டு வருஷங்களாகவே பண நெருக்கடி இருப்பது எல்லோருக்கும் தெரியும். ஆகவே, நான் பணத்துக்காக அரசியலுக்கு வருவது என்றால் சில வருஷங்களுக்கு முன்னாலேயே வந்திருப்பேன். ஆக, பண நெருக்கடியைச் சமாளிப்பதற்காக நான் இந்த முடிவை எடுக்கவில்லை. அதேசமயம், என் நிலைமை கட்சிக்குத் தெரியும் என்பதால் ஏதாவது உதவி கிடைக்கும் என்று நினைக்கிறேன்."

**சன் டி.வியில் உங்களுக்கு நேரம் ஒதுக்கித்தர பேச்சுவார்த்தை முடிந்துவிட்டதாகச் சொல்லப்படுகிறதே?**

"ஐயோ! அப்படியொன்றுமில்லை! நான் அறிவாலயம் சென்று கலைஞரைச் சந்தித்து கட்சியில் சேர்ந்தேன். அங்கே ஸ்டாலின், தயாநிதி மாறன் ஆகியோரையும் பார்த்தேன். நான் கலாநிதி மாறனைச் சந்திக்கவேயில்லை. சன் டி.வியில் நேரம் ஒதுக்கி இருக்கிறார்கள் என்பதெல்லாம் உண்மையில்லை."

**தி.மு.க.காரராகிவிட்ட உங்களால் இனிமேல் ஒரு பத்திரிகை ஆசிரியர் என்ற முறையில் நடுநிலையுடன் இருக்க முடியுமா?**

"அடுத்து தி.மு.க. ஆட்சி வந்தால், அதில் ஏதாவது குறை சொல்லும்படியான சூழ்நிலை ஏற்பட்டால், அதை நான் பத்திரிகை மூலமாகத்தான் சொல்ல வேண்டும் என்று அவசியமில்லையே! நான் அதை நேராகவே கலைஞரின் கவனத்துக்குக் கொண்டு போய்விட முடியுமல்லவா?"

**- எஸ். சந்திரமௌலி**



# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

• படம்: ஸ்ரீஹரி

**மேஷம் :** மேன்மையான வாரம். மகிழ்ச்சியும் சந்தோஷமும் மிகுந்து காணும். தனம், கல்வி மேலோங்கும். பணக் கஷ்டம் இருக்காது. வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். திருமணக் காரியம் கைகூடும். குழந்தைப் பேறு கிட்டும். உத்தியோகஸ்தர்களுக்கு உயர்வு, மாறுதல் ஏற்படும். குழந்தைகள் வழியில் நற்பலன் ஏற்படும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ஆஞ்சநேயர் ஸ்லோகம் படித்து வரவும்.

**ரிஷபம் :** வழக்கு வெற்றி அளிக்கும் வாரம். கடன் தொல்லை குறைய ஆரம்பிக்கும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். நெருங்கிய நண்பர்/உறவினர் விலகிச் செல்வார்கள். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம் வரலாம். வியாபாரத்திலிருந்த மந்தநிலை மாறி வியாபாரம் சூடு பிடிக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும்.

**மிதுனம் :** நினைத்தது நடக்கும் வாரம். சுபகாரியப் பிரயாணம் வந்து சேரும். நண்பர்களால் ஆதாயம் கிட்டும். வாக்குவன்மை மேலோங்கும். வீட்டில் சுபச்செலவு ரெடி. குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். வெளி நாடு செல்ல நேரிடும். உடல் ஆரோக்கியம் நன்றாக

## 16.4.2006 முதல் 22.4.2006 வரை

இருக்கும். தாயின் உடல்நிலை பாதிக்கும். வியாபாரத்தை அபிவிருத்தி செய்ய நேரிடும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வரவும்.

**கடகம் :** மகிழ்ச்சிகரமான வாரம். எண்ணங்கள் ஈடேறும். வாக்குவன்மை, கல்வி மேலோங்கும். சுபகாரியச் செலவு ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். நண்பர்கள் இடம்மாறிச் செல்வார்கள். உடல்நிலை நன்றாக இருக்கும். உல்லாசப் பிரயாணம் ஏற்படும். உத்தியோகத்தில் நல்ல மேன்மை கிட்டும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். வியாபாரத்தில் முற்போக்கான சூழ்நிலை காணும். புதிய தொழில் வாய்ப்பு வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும். சனி/குரு வழிபாடு செய்து வரவும்.

**சிம்மம் :** பல போராட்டங்களைச் சந்தித்து வெற்றி வாகை சூடும் வாரம். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. யாரிடமும் வாக்குவாதம் செய்ய வேண்டாம். கைப்பொருள் மீது கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும்போது உஷார். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. மாணவ/மாணவியர் கவனமுடன் படிக்கவும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். உடல்நிலையில் கவனம் செலுத்தவும். வழக்கு, வியாபாரம் சற்று இழுபறியாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுபகாரியம் கைகூடும். ராகு/கேது/குரு/சனி/வழிபாடு செய்து வரவும்.

**கன்னி:** சுபகாரியம் கைகூடும் வாரம். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். வேலைப்பளு ஜாஸ்தி இருக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் வரலாம். பணப் பற்றாக்குறை வராது. கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. பொருளாதாரச் சிக்கல் வராது. திடீர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். பூர்வீகச் சொத்து கிடைக்கும். மனக்குழப்பம் போகும். ராகு/கேது வழிபாடு செய்து வருதல் நலம்.

**துலாம்:** மகிழ்ச்சியான வாரம். திருமணக் காரியம் கைகூடும். பண வரவு ஏற்படும். வழக்கு வெற்றி வாகை சூடும். முடியாத காரியங்கள் முடிவுக்கு வரும். உடல்நிலை நன்றாக இருக்கும். பணப் பிரச்னை வராது. வீடு/வாகனம் வாங்க நல்ல தருணம். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். உத்தியோகத்தில் வேலை மாறுதல் கிட்டும். தொலைதூரப் பிரயாணம் செல்ல நேரிடும். குரு/சனி வழிபாடு நல்லது.

**விருச்சிகம் :** எதிர்ப்புகள் நிறைந்த வாரம். சுபகாரியம் கைகூடும். நீண்டகாலக் கனவுகள் நிறைவேறும். பத்திரிகைகளில் பெயர் வரும். வாக்குவன்மை மேலோங்கும். சிலருக்கு வேலையில் இடமாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாறுதல் ஏற்படும். நெருங்கிய உறவினர்/நண்பர்களை விட்டு விலகிப் போக நேரிடும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஏற்படும். குழந்தைகள் பற்றின மனக்கவலை தீரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். புதிய தொழில் துவங்க உத்தமம். வீடு வாங்கலாம். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும்.

**தனுசு :** அற்புதமான வாரம். சுபகாரியம் நடக்கும். மனத்தில் சந்தோஷம் ஏற்படும். நீண்டகால எண்ணங்கள், பிரார்த்தனைகள் நிறைவேறும். புதிய முயற்சி கைகூடும். மனநிறைவு பெறும் வாரம். படிப்பில் நன்மதிப்பைப் பெறுவார்கள். உற்றார் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். சுபச்செலவுகள் நடக்கும். கணவன்- மனைவி உறவு நன்றாக இருக்கும். பூர்வீகச் சொத்து கிடைக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நீண்டகாலம் முடிவு பெறாத வழக்கு, வியாபாரம் வெற்றி தரும். தொழில் துறையில் லாபம் கிடைக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வரவும்.

**மகரம் :** தெய்வபலம் மிகுந்த வாரம். முயற்சியில், காரியங்களில் வெற்றி கிட்டும். தனம், வாக்கு, கல்வி மேலோங்கும். சுபகாரியம் கைகூடி வரும். வேலையில் மாற்றம் ரெடி. உடல்நிலை பாதிக்காது. கொடுக்கல் வாங்கல்

## பார்வைக் பதில்கள்

**எனது மேற்படிப்பு, வேலை, திருமணம் பற்றிக் கூற முடியுமா?**

**- ரேகா, திண்டுக்கல்**

உங்களுக்கு ராகுதசை நடக்கிறது. 2006-ல் தனியார் நிறுவனத்தில் நல்ல வேலை கிடைக்கும். 2006-ல் கல்வியைத் தொடர வாய்ப்பு ஏற்படும். மூன்றாவது வேலை நிரந்தரமாக அமையும். 25 வயதுக்குப் பிறகு திருமணம் முடியும். நாகதோஷம் உள்ள வரனைப் பார்க்கவும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும்.

**என் பையனுக்குப் பெற்றோர் பார்த்து நிச்சயிக்கும் திருமணமா, காதல் திருமணமா - எது அமையும்?** **- என். பாலகிருஷ்ணன், ஊட்டி**

உங்கள் பையன், அவர் விரும்பும் எந்தப் பெண்ணையும் திருமணம் செய்ய முடியாது. குடும்பத்தில் பார்த்து நிச்சயித்த திருமணமே நடக்கும். 30 வயதில் திருமணம் நடக்கும்.

**எனது மகளின் திருமணம் எப்போது நடைபெறும்?**

**- சீதாலட்சுமி, சென்னை**

உங்கள் பெண்ணுக்கு 2006-ல் திருமணம் முடியும். சர்ப்பதோஷம் இருப்பதால் ஜாதகம் சரிவரச் சேர்ப்பது இல்லற வாழ்வுக்கு நற்பலனை அளிக்கும். தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் படித்த, பண்புள்ள நல்ல வரன் அமையும். பரிகாரம் வேண்டாம்.

**எனது பெண்ணுக்குத் திருமணம் எப்போது நடக்கும்? மணவாழ்க்கை எப்படி அமையும்?** **- எஸ். பத்மா, ஷிமோகா**

தற்போது நடக்கும் புதன்தசை குருபுத்தி 12.4.2007 வரை அமையும். இக்கால கட்டத்தில் திருமணம் கைகூடாது. இது முடிந்து புதன் தசை சனி புத்தியில் திருமணம் நடக்கும். உறவில்லாத இடத்தில், நன்கு படித்த, சம்பாதிக்கும் பையன் அமைவான். செவ்வாய்தோஷம் உள்ள வரனைப் பார்க்கவும்.

நன்றாக இருக்கும். வெளிநாட்டு அழைப்புக் கிட்டும். பணக்கஷ்டம் இருக்காது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மனச்சலனம் போகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நீண்டநாள் ஆசைகள் நிறைவேறும். தொழில் துறையில் லாபம் கிடைக்கும். சனி/குரு வழிபாடு நன்றாக இருக்கும்.

**கும்பம்:** மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் கிட்டும் வாரம். வாக்கு வன்மை மேலோங்கும். நீண்டநாள் முடிவு பெறாத காரியம் முடிவுக்கு வரும். உடல்நிலையில் கவனம் தேவை. குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. வீடு வாங்கும் தருணம். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. திருமணக் காரியம் கைகூடும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. ராகு/கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**மீனம் :** மனசஞ்சலம் தீரும் வாரம். பணவரவு ஏற்படும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. திடீர்ப் பிரயாணம் ஏற்படும். போட்டி, பொறாமை தொழில்துறையில் இருக்கும். எதிரிகள் அருகில் இருப்பார்கள். உத்தியோக உயர்வு ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். திருமணக் காரியம் கைகூடும். தடங்கல் விலகும். வேலைப் பளு ஜாஸ்தி ஆகும். கொடுக்கல்/வாங்கல் நன்றாக இருக்கும், குழந்தைகள் வழியில் சந்தோஷம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல திருப்பம் ஏற்படும். புதிய தொழில் கைகொடுக்கும். நண்பர் / உறவினர் அனுகூலம் ஏற்படும். வழக்கு வெற்றி பெறும். ராகு / கேது /குரு / சனி வழிபாடு சாலச் சிறந்தது.

# ராக்கு முத்து ராக்கு!

**கு.ஞானசம்பந்தன்**

'சிண்ட்ரெல்லா' கதை 58 முறை படமாக்கப்பட்டுள்ளது.

'டிராகுலா' திரைப்படம் 133 முறை எடுக்கப்பட்டுள்ளது.

'டார்சான்' படங்கள் 83 முறை பல்வேறு இயக்குநர்களால் உருவாக்கப்பட்டுள்ளன.

- 'உலக சினிமா' எஸ். ராமகிருஷ்ணன்

'பட்டிக்காடா பட்டணமா' படக் குழுவினர் வந்து இறங்கிவிட்டார்கள் என்று கேள்விப்பட்டவுடன் எங்களின் அவசரக்கூட்டம் அன்று மாலையே ஆற்றங்கரைத் தோப்பில் கூட்டப்பட்டது.

நாங்கள் எந்தக் கேள்வியும் கேட்பதற்கு முன்னே சினிமாமணி ஆரம்பித்தான். "டேய் நல்லாக் கவனிங்க. இந்தப் படத்தை 'மாதவன்'ங்கிற டைரக்டர் எடுக்கப் போறாராம். நம்ம மதுரைக்கார பாலமுருகன்தான் கதை வசனமாம். கதாநாயகி 'ஆயிரத்தில் ஒருவன், கலாட்டாக் கல்யாணம்' இதில் நடிச்ச ஜெயலலிதாவாம். கதாநாயகன் யார் தெரியுமா?" மணி சஸ்பென்ஸாக நிறுத்தினான்.

'ஜெய்சங்கர்', 'ரவிச்சந்திரன்', 'முத்துராமன்' என்று நாங்கள் ஆளாளுக்கு ஒவ்வொரு பெயராகச் சொல்ல, அத்தனை பேரையும் மறுத்துத் தலையாட்டிய மணி சொன்னான் "நம் சிவாஜிகணேசன் தான்டா!" எங்களுக்கு அப்படியே மூச்சே நின்றுவிடும்போல இருந்தது. ஏனென்றால் அந்தக் காலத்தில் எம்.ஜி.ஆர், சிவாஜி படங்கள்தான் பல வீடுகளில் சாமி படங்களுக்கு அடுத்தபடியாக மாட்டப்பட்டிருக்கும். அதிலும் 'திருவிளையாடல்' படம் வந்த பிறகு சிவபெருமான், பார்வதி உருவங்களாக சிவாஜி, சாவித்ரி படங்களே அதிகம் விற்பனையானதை நானே பார்த்திருக்கிறேன்.

"சரிடா, நமக்கு நிறைய வேலை இருக்கு. நான் அனேகமா அந்த சினிமா குழுவோடதான் இருப்பேன். எங்கெங்கு, என்னென்னைக்கு ஷூட்டிங் நடக்குது, யார் யார் வர்றாங்கன்னு நான் உடனடியாத் தகவல் தர்றேன். நாமதான் கூட இருந்து படத்தை முடிச்சுக் குடுக்கணும்" என்று பொறுப்பாகப் பேசினான் சினிமாமணி. படத் தயாரிப்பாளரும், கதாநாயகனும்கூட இவ்வளவு கவலைப்பட்டிருப்பார்களா என்று தெரியவில்லை. நாங்கள் அவ்வளவு கவலைப்பட்டுத் தூங்காமல் அலைந்தோம்.

பள்ளிக்கூடத்தில் அரைப்பரீட்சை வருவதாகப் பேசிக்



கொண்டார்கள். நாங்கள் அதைப் பற்றிக் கவலைப்பட வில்லை. ஒரு மனிதன் எத்தனை கவலைதான் படமுடியும்? நீங்களே சொல்லுங்கள்!



எங்கள் கிராமத்தில் சினிமா எடுக்கப் போகிறார்கள் என்று சுத்துப்பட்டு கிராமங்கள் அனைத்திலும் தெரிந்து போய் விட டீக்கடை, சலூன், சாவடிகள், காய்கறிச்சந்தை, பள்ளிக்கூடங்கள் என்று எங்கும் சினிமா என்பதே பேச்சு! குறிப்பாக சினிமா அறிவைப் பெரிதும் வளர்க்கும் முழு நேரப் பள்ளிக்கூடங்களாக இருந்தவை கிராமத்து சலூன்கள்தான். இப்போது போல 'பியூட்டி பார்லர்' என்ற நாகரிகப் பேரெல்லாம் அதற்குக் கிடையாது.



வைகையாற்றின் தோப்புக் கரையோரம் சிறிய மண் சுவர்களிலும் தென்னங் கீற்றுகளாலும் அமைந்திருப்பவைதான் முடி வெட்டும் இடங்கள். நட்ட நடு நாயகமாக ஒரு சுழல் நாற்காலி. எதிரே மண் சுவரில் பெரிய கண்ணாடி. எல்லாத் திசைச் சுவர்களிலும் தியாகராஜ பாகவதர், டி.ஆர்.ராஜகுமாரி தொடங்கி அந்தந்த காலகட்டத்து கவர்ச்சி நடிகைகள் படம் வரை ஒட்டப்பட்டிருக்கும். பெரியவர்கள் சுழல் நாற்காலிகளில் அமர்த்தப்படுவார்கள்.

சிறுவர்களுக்குத் தரைதான். அதில் தென்னங்கீற்றுத் தட்டி போடப்பட்டிருக்கும். சினிமா பத்திரிகைகளும் பார்க்கக் கூடாத படங்கள் (நடுப்பக்கத்தில்) வரும் பத்திரிகைகளும் அங்கு போடப்பட்டிருக்கும்.

எங்கள் வீட்டில் நான் முடிவெட்டப் போகும் கதை பெருங்கதை. பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை எங்கள் வீட்டுக்கு வயதான முடிதிருத்தும் தாத்தா ஒருவர் வருவார். எங்கள் தந்தையாரின் ஆஸ்தான முடிதிருத்துநர் அவர்தான்.

வீட்டுத் திண்ணையில் காலை நேரத்தில் அந்தக் கண்கொள்ளாக் காட்சி நடைபெறும். முடிதிருத்துநர் முத்துராக்கு வந்தவுடன், நான் ஓடிப்போய், என் தகப்பனார் தரையில் உட்கார ஒரு சிறிய பலகையைப் போடுவேன். என் தாயார் ஓர் உருண்டைச் செம்பில் வெந்நீர் கொண்டு வந்து வைப்பார்.

நான் இதற்காகவே வீட்டில் இருக்கும் ஒரு முகக் கண்ணாடியை எடுத்து வருவேன். அதில் என் அப்பா மட்டும்தான் முகம் பார்க்க வேண்டும்; முடியும். எல்லாம் தயார் என்றவுடன் என் தந்தை சபைக்கு வரும் ஜமீன்தார் போல

''மந்திரிகிட்டே பொண்ணு அட்மிஷனுக்கு சிபாரிசுக் கடிதம் வாங்கப் போனீங்களே, என்னாச்சு?''

''மெடிக்கல் சீட் வேணா வாங்கித் தர்றேன். எல்.கே.ஜி.க்கெல்லாம் என்னால ஒண்ணும் பண்ண முடியாதுன்னுட்டார்!''

- ஆர்.ராஜலட்சுமி



வந்து அமர்வார்.

முத்துராக்கு அவருக்கு எதிரே குத்த வைத்து உட்கார்ந்து தன் வேலையைத் தொடங்குவார். நான் சற்று தூரத்தில் கைகட்டி நிற்பேன். அந்த நேரத்தில் என் தந்தையாரிடத்தில் சிலர் வந்து யோசனை கேட்பார்கள். என்னைப் பற்றிப் பல ஆலோசனைகளையும் சொல்வார்கள்.

அரசியல், வேதாந்தம், நாட்டு நடப்பு என்று பல்வேறு தலைப்புகளில் தன் வல்லமையைக் காட்டிப் பேசியபடி தன் வேலையைச் செய்வார் முத்துராக்கு.

'ம்', 'இல்லை', 'ஆமா', 'கிடையாது' 'போதும்' என்று ஒற்றைச் சொற்களால் விடை சொல்லிக்கொண்டிருப்பார் என் தந்தை.

அடுத்து என் முறை. "நீ உட்காரப்பா" சொல்லிவிட்டு பின்பக்கம் குளிக்கப் போய்விடுவார் என் தந்தை.

முடிவெட்டுவதற்கு முத்துராக்கு பயன்படுத்தும் ஆயுதங்களைப் பார்த்தாலே எனக்குக் குலை நடுங்கும். ஒரு சிறிய பெட்டி, உள்பக்கத்தில் உருவமே தெரியாத முகம் பார்க்கும் கண்ணாடி. பெரிய தவளையின் பின்னங்கால்கள் போலவும் பெரிய பற்களைக் கொண்ட 'கிளிப்' போன்ற ஒரு மிஷின் மடித்து வைக்கப்பட்டிருக்கும். கத்தி. அதைத் தீட்ட பளபளப்பான சிறிய கல். ஒரு சிறிய கிண்ணி (இப்போது பல ஹோட்டல்களில் அதைப்போல பதினாறு கிண்ணிகளில் சாம்பார், மோர், ரசம், பாயசம் தருகிறார்கள்)

சட்டையைக் கழற்றிவிட்டு நான் உட்கார வேண்டும். உடனே என் தலையில் இலேசாகத் தண்ணீர் கொட்டி பத்து விரல்களையும், தலை முடிக்குள் விட்டு தாயன்புடன் கோதிவிட்டு, பிறகு அந்தத் தவளைக்கால் மிஷினை எடுத்து என் தலையை ஒற்றி டிராக்டர் ஓட்டுவதுபோல சுற்றிச் சுற்றி அடிப்பார் முத்துராக்கு. அப்போதே தலை ஏறத்தாழ மொட்டையாகியிருக்கும். பிறகு தன் சந்தேகத்தைப் போக்கிக் கொள்ள சிறிய கத்தரியாலும், இரும்புச் சீப்பினாலும் 'இரக்' 'இரக்' என்று வெட்டி எறிந்தபின் பார்த்தால்... இருப்பதிக்குப் போய்விட்டு வந்தவன் போல நான் காட்சியளிப்பேன்.

எல்லாம் முடிந்தது என்று உடனே நான் உள்ளே போக முடியாது. என் தந்தை வந்து என்னை ஒருமுறையும், என் தலையை ஒருமுறையும் சுற்றிப் பார்த்துவிட்டுச் 'சரி' என்று தலையசைத்தால்தான் அன்றைய வேலை முடிந்ததாக அர்த்தம்.

முத்துராக்கு நல்ல சினிமா, நாடக ரசிகரும்கூட. அவரோடு எங்கள் வீட்டுக்குத் தெரியாமல் (வழக்கப்படி) 'அல்லி அர்ஜுனா' தெருக்கூத்துக்கும் போயிருக்கிறேன். அவர் நாடகக்காரர்களுக்கு ஆர்மோனியம் வாசிப்பவர்.

அதனால் அவர் என் தலையில் ஆயிரம் வெட்டினாலும் அதைப்பற்றிக் கவலைப்பட மாட்டேன்.

(ரீல் சுற்றும்)

அருட்செல்வர்

**நா. மகாலிங்கம்**

அவர்களின் ஞானத் தமிழ்க் கொடை



2006 மே திங்கள் வெளிவரும்

# ஞானப் பரம்பரை

**முப்பது அருளாளர்களின் வாழ்வு - வாக்கு - பணி பற்றிய**

## ஞானக் களஞ்சியம்

சுமார் 3000 பக்கங்களில் 30 நூல்கள் கொண்ட 5 தொகுதிகள் விலை ரூ. 1500/-

சுமார் நூறு பக்கங்கள் கொண்ட தனித்தனி நூல்களின் விலை ரூ. 50/-

**15.5.2006-க்குள் முன்பணம் செலுத்துபவர்களுக்கு**

5 தொகுதிகள் சேர்த்து சலுகை விலை ரூ. 1000/- (லாரிமூலம் பெற ரூ. 1150/-)

தனித்தனி நூல்கள் பத்து அல்லது ஒரே நூலில் பத்துப் பிரதிகள் வாங்குபவர்களுக்குச் சலுகை விலை ரூ. 400/- (கூரியரில் பெற ரூ. 450/-)

'விஜயா பதிப்பகம்' என்ற பெயரில் கோவையில் மாற்றத்தக்கதாக வரைவோலை (D.D.) அல்லது மணியார்டர் (M.O.) கோவை விஜயா பதிப்பக முகவரிக்கு அனுப்பவும் (காசோலையைத் தவிர்க்கவும்).

### நூல்களும் உருவாக்கிய ஆசிரியர்களும்

**தொகுதி 1**

| | |
|---|---|
| காரைக்கால் அம்மையார் | - முனைவர் திருமதி தரணி பாஸ்கர் |
| திருஞான சம்பந்தர் | - மரபின் மைந்தன் ம. முத்தையா |
| திருநாவுக்கரசர் | - பேராசிரியர் இராம. இருசுப்பிள்ளை |
| சுந்தரர் | - புலவர்மணியன் |
| மாணிக்கவாசகர் | - முனைவர் தெ. ஞானசுந்தரம் |
| சேக்கிழார் | - முனைவர் செல்வக் கணபதி |

**தொகுதி 2**

| | |
|---|---|
| நம்மாழ்வார் | - முனைவர் த. வசந்தாள் |
| பெரியாழ்வார் | - முனைவர் திருமதி தரணி பாஸ்கர் |
| ஆண்டாள் | - முனைவர் நிர்மலா மோகன் |
| குலசேகராழ்வார் | - முனைவர் கா. அரங்கசாமி |
| திருமங்கையாழ்வார் | - முனைவர் அமுதன் |

**தொகுதி 3**

| | |
|---|---|
| திருமூலர் | - முனைவர் அ. அறிவொளி |
| சங்கரர் | - வைத்தியநாத கிருஷ்ணன் |
| இராமானுஜர் | - முனைவர் ம.பெ. சீனிவாசன் |
| மத்துவர் | - டாக்டர் சுதா. சேஷையன் |
| வேதாந்த தேசிகர் | - முனைவர் திருமதி பிரேமா நந்தகுமார் |
| மெய்கண்டார் | - முனைவர் ந. இரா. சென்னியப்பன் |

**தொகுதி 4**

| | |
|---|---|
| அருணகிரிநாதர் | - முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன் |
| குமரகுருபரர் | - முனைவர் இரா. மோகன் |
| சிவப்பிரகாசர் | - முனைவர் மனோன்மணி |
| தாயுமானவர் | - முனைவர் இ. சுந்தரமூர்த்தி |
| சிவஞான முனிவர் | - முனைவர் வே. செல்லாத்தாள் |
| சாந்தலிங்க அடிகளார் | - தவத்திரு ராமசாமி அடிகளார் |

**தொகுதி 5**

| | |
|---|---|
| குணங்குடி மஸ்தான் | - முனைவர் தக்கலை பஷீர் |
| வீரமாமுனிவர் | - முனைவர் ம.செ. இரபிசிங் |
| கந்தசுவாமி சுவாமிகள் | - புலவர் ப.வெ. நாகராஜன் |
| வள்ளலார் | - முனைவர் ம.ரா.போ. குருசாமி |
| தண்டபாணி சுவாமிகள் | - முனைவர் நெல்லை ந. சொக்கலிங்கம் |
| பாரதியார் | - சிற்பி பாலசுப்பிரமணியம் |
| சுவாமி சித்பவானந்தர் | - திரு. மு. மாரியப்பன் |

**வெளியீடு**

**நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி**

பாலக்காடு சாலை, பொள்ளாச்சி - 642 001. போன் : 04259-234868, 234870

**தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி**

விற்பனை
**விஜயா பதிப்பகம்**
20, இராஜ வீதி, கோயமுத்தூர் - 641001.
போன் : 0422-2394614, 2382614

சென்னையில் கிடைக்குமிடம்
**வர்த்தமானன் பதிப்பகம்**
40, சரோஜினி தெரு, தியாகராய நகர், சென்னை - 17.
போன் : 044-24364174

# தேவவிரதன்



"ஹலோ"

என் பெயரைச் சொல்லிக் கேட்டது அந்தப் பெண்குரல்.

"ஸ்பீகிங்"

"நீங்கள்தானே 'ருக்மாங்கதன்' என்ற பெயரில் சமீபத்தில் '....' இதழில் 'கூடு' என்ற கதையை எழுதியது...?"

சற்றுத் தயக்கத்திற்குப் பின் "ஆமாம்... நீங்கள் யார் என்று நான் தெரிந்துகொள்ளலாமா?" என்றேன்.

"நானா...? ம்... நான் மீரா கிருஷ்ணன். நீங்கள் எழுதி வீரகளே சௌந்திரராஜன் மாமா... அவருடைய பெண்..."

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு "நான் சுந்தர்ராஜன் என்பவரைப் பற்றி அல்லவா எழுதியிருந் தேன்...?" என்றேன் சாமர்த் தியமாக.

"ஆ...மாம்... இரண்டுக்கும் என்ன பெரிய வித்தியாசம்...?"

"........"

"உங்களுக்கு என் அப்பாவை எப் படித் தெரியும்...?"

இனிமேல் தப்பிக்க வழியில்லை.

"உங்களுக்கு நான் உங்கள் அப்பா வைப் பற்றித்தான் எழுதினேன் என்று எப்படித் தெரியும்?"

மறுமுனையில் மீரா இலேசாகச் சிரித்தாள்.

"அந்த வீட்டைப் பற்றிய வர்ணனை, அவரது குணவிசேஷங்கள், கிரிக்கெட் விமர்சகர்... இப்படிப் பல சமாசாரங்கள் அவருக்குப் பொருத்தமாக இருக்கின் றதே?" என்றாள்.

"ஓ..." என்றேன் நான் பலவீனமாக.

"சரி, எப்படியோ... நான் அந்தக் கதையைப் பற்றி உங்களிடம் பேச வேண்டும்."

"என்ன பேச வேண்டும்?"

"உங்களை எங்கே பார்க்கலாம், எப்போது பார்க்கலாம் என்று சொல்லுங்கள்."

நான் வீட்டு விலாசத்தைத் தந்து "ஆறு மணிக்கு மேல் வாங்க" என்றேன்.

"அதானே பார்த்தேன். அப்பா வீடு இருக்கும் தெருவில்தான் நீங்களும் இருக் கிறீர்கள்" என்றுவிட்டு இணைப்பைத் துண்டித்தாள்.

நான் என் கதை பிரசுரமானதைவிட படபடப்புடன் மீராவின் வருகைக்காகக் காத்திருந்தேன்.

சரியாக ஆறரை மணிக்கு மீரா கிருஷ் ணன் வந்தாள். நான் எதிர்பார்த்தது போல் நடுத்தர வயதுப் பெண்மணிதான். மாமாவின் சாயல் இலேசாகத்தான் இருந்தது.

எனது வீட்டு ஹாலைச் சுற்றி கண் களைச் சுழற்றியவள் "நீங்கள் ஆர்ட் டிஸ்டா?" என்றாள் புன்னகையுடன்.

"ஆமாம். பொழுதுபோக்கு..."

"கதை எழுதறது இன்னொரு பொழுது



மீரா மௌன மாக இருந்தாள். நான் சொன்ன பதில் ஒன்று அவளுக்குப் புரியவில்லை அல்லது திருப்தியளிக்கவில்லை.

மீரா ஒரு நிமிஷத்துக்குப் பிறகு கேட்டாள்.

"உங்களுக்குக் கல்யாணம் ஆயிடுச்சா?"

'இல்லை' என்கிற மாதிரி தலையசைத்தேன்.

"பாக்கறாங்களா?"

பேச்சு திசை திரும்புவதை உணர்ந்தேன். என் வயதும், நிறமும் அவளை என்னை ஒரு அந்தணர் வகுப்பைச் சேர்ந்தவன் என்று தவறாக உணர்த்தக்கூடும். அதைத் தவிர்க்க நான் புன்னகையுடன் சொன்னேன்.

"நீங்க வந்திருக்கறது என் கதையைப் பத்திப் பேசன்னு நினைக்கிறேன்."

"ஓ... ஸாரி..."

"பரவாயில்லை. சொல்லுங்க."

# மௌனம் பேசியதே...

போக்கா?"

நான் புன்னகை செய்தேன்.

"அப்பா எப்படி உங்களுக்கு ஃப்ரெண்ட் ஆனார்? அவர் எல்லார் கிட்டேயும் நன்றாகப் பேசுவார். உங்களுக்கும் அவருக்கும் ஏகப்பட்ட வயசு வித்தியாசம் ஆச்சே? நீங்க இந்தக் காலத்து இளைஞர். அவரோட எப்படிப் பேச முடிந்தது?" என்றாள் வியப்புடன்.

"அதுவும்தான் அந்தக் கதையிலேயே இருந்ததே?" என்று சிரித்தேன்.

"கிரிக்கெட்டா?"

தலையசைத்தேன்.

"ரொம்ப யங்கா இருக்கீங்க. வயசானவங்களோட மனசப் பத்தின கதை எழுதியிருக்கீங்க?" என்றாள் மீரா ஆச்சர்யமாக.

"மனசுக்கு வயசில்லை. கற்பனைக்கும் வயசில்லை."

"அப்பாவுக்கு வீட்டு மேல அசாத்திய பாசம். அதனால்தான் கடைசிவரை விக்கமாட்டேன், இடிக்க விடமாட்டேன்னு பிடிவாதமா இருந்தார். அதைத் தான் நீங்களே உங்க கதைல எழுதியிருக்கீங்களே... ஆனா கடைசி காலத்தில வீடு தன்னோட பேசினதுன்னு சொன்னதா இருக்கே. அதுபோல ஏதாவது சொன்னாரா என்ன?"

நான் சிரித்தேன்.

"அதுதான் உங்க சந்தேகமா?"

"ஆமாம். வயசானவங்களுக்கு புத்தி பிறழ்ந்து போகும்பாங்க. எங்க வீட்டுக்காரர் இந்த வீட்டை இடிச்சு ஃப்ளாட் ஆக்கணும்னு விரும்பினார். எனக்கும் அது சரின்னுதான் பட்டது. ஆனா இவர் கூடவே கூடாதுன்னுட்டார். அதனால்தான் தனியாகப் போய் இருந்

தோம். அவரும் சுகப்படலை. மத்த வங்களையும் சந்தோஷப்படுத் தலை."

"அது உங்க அபிப்ராயம். எனக்கு உங்க குடும்ப சமாசாரம் எல்லாம் தெரியாது. வீட்டையும், அவர் தனியா இருக்கறதையும் கருவா வச்சுத்தான் கதை எழுதினேன்."

"வீடு பேசினது?"

"என் கற்பனை."

"நிஜமாகவா?"

"இதுல பொய் என்ன. ஆனா அதை நிரூபிக்க உங்க அப்பா இப்ப உசிரோட இல்லை."

"எங்களைப் பத்திப் பேசினதில் லையா?"

'ம்ஹூம். மீரா நீங்க ஒண்ணு புரிஞ்சுக்கணும். ஏதோ ஒரு நிகழ்வை அல்லது இடத்தைப் பார்த்துத்தான் எல்லாரும் கதை எழுத றாங்க. நான் உங்க அப்பாவோட பேசியது, பழகியது உண்மை. அது வெறும் கிரிக்கெட் பத்தின டிஸ்கஷன்தான். பர்ஸனலா எதுவுமே கிடையாது. நானும் கேட்டதில்லை. அவரும் சொன்ன தில்லை"

"ஆனா உங்க கதையைப் படிச்சப்போ, என்னவோ அப்பாவோட மனசை நான் சரியா புரிஞ்சுக்காம விட்டுட்டே னோன்னு தோணுச்சு. பாவம், தூக்கத் துலதான் போனார். நீங்க எழுதியிருந்த மாதிரி வீட்டை இடிக்கிறது கூட்டைக் கலைக்கறது போலம்பார். அதை நீங்க எழுதி 'கூடு'ன்னும் தலைப்புக் கொடுத் திருந்தது ரொம்ப மனசு கஷ்டப்படுத் துச்சு.." மீராவின் கண்கள் இலேசாகக் கலங்கியது போல் இருந்தது. நான் பதில் பேசவில்லை. இது ஒருவகையில் எனக்கு வெற்றி என்று கொள்ளலாம் என்று தோன்றியது. அந்தக் கதை, யாரை, எங்கே சென்று தொட வேண்டுமோ அங்கே தொட்டிருக்கிறது. நான் எதிர்பாராமலே "ஐ'ம் ஸாரி மீரா. நான் என்னோட கற்ப னைல கட்டின கதை உங்களை இத்தனை கஷ்டப்படுத்தும்னு நினைக்கலை" என்றேன்.

மீரா கண்களைத் துடைத்துக் கொண்டு புன்னகை செய்தாள்.

"இட்ஸ் ஓ.கே. அவர் அப்ப அந்த மாதிரி வீடு தன்கிட்ட பேசினதுனால



தான் விக்கணும்னு சொல்லல. இல் லையா..?"

"ஆமாம். அதான் சொன்னேனே. அது என் கைச்சரக்கு"

"அதுசரி. வீடு பேசுமா?"

"யாரைக் கேக்கறீங்க?"

"உங்களைத்தான். நீங்கதானே அப்படி எழுதியிருக்கீங்க!"

"சரிதான் போங்க. காதலிக்கறவங்க தான் காதல் கதை எழுதணும்பீங்களா?"

"அப்படியில்ல..." என்று இழுத்தவள், "எங்க வீட்டைப் பத்தி இன்னொரு கதை உண்டு..." என்றாள்.

எனக்கு திகைப்பு ஏற்பட்டது.

"அது யார் எழுதினது?"

"யாரும் எழுதல. அந்தக் காலத்துல எங்கம்மா சொல்லுவாங்க. எங்க வீட்டுக் கொல்லைப் புறத்தில் கிணற்றடிக்குப் பின்னால் ஓரிடத்தில வீடு கட்டும்போது புதையல் கிடைச்சுதாம்."

நான் விழித்தேன். இது என்ன புது சேதி!

"புதையலா?"

"ஆமாம். பத்து தங்கக் காசு..."

"நிஜமாகவா?"

"எனக்குத் தெரியாது. நான் பிறக்கவே யில்ல. அம்மா சொல்லித்தான் தெரியும். ஆனா அப்பா சொன்னதில்ல."

"அதனால..."

"அதுபோல அப்பாவுக்கும் ஏதாவது வெளியில சொல்லாத ரகசியம் அந்த

## சிறுகதைப் போட்டி-2006

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும்.

**விதிமுறைகள், மற்ற விவரங்களுக்கு 16.4.2006 இதழ் கல்கியைப் பாருங்கள். அல்லது அடுத்த இதழுக்குக் காத்திருங்கள்.**



- ஆர்.

வீட்டில இருந்ததோ என்னவோ. அதை ஃப்ரண்டா உங்ககிட்ட பகிர்ந்துக்கிட்டா ரான்னு கேக்க நினைச்சேன்."

"அதெல்லாம் ஒண்ணும் கிடையாது மீரா. இப்ப வீடு உங்களதுதானே. நீங் களே இருந்து பேசறதா... பழகறதா... புதையல் இருக்கான்னு பாருங்களேன்" என்றேன்.

காரணம் தெரியாமல் எனக்கு திடீ ரென்று மீராவின்மேல் எரிச்சல் ஏற்பட் டது. புதையல், பொக்கிஷம் என்று ஏதா வது கிழவர் சொல்லியிருப்பாரோ என்கிற சந்தேகத்தில்தான் என்னைப் பார்க்க வந்தாளா?

மீரா சட்டென்று எழுந்து கொண்டாள்.

"சரி... அப்போ நான் வரேன். நீங்க நல்லா எழுதறீங்க. என்னோட தோழி ஒருத்திகிட்ட ரொம்ப சுவாரஸ்யமான ஒரு உண்மைக் கதை இருக்கறதா சொன்னா. அவளை உங்ககிட்ட ஒரு நாள் அழைச் சிட்டு வரேன்."

நான் சிரித்தபடி தலையசைத்தாலும் 'ரொம்பத் தேவை' என்று நினைத்துக் கொண்டேன்.

"சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கங்க. 'ரொமான்டிக்' கதைகள் எழுதலாம்..." என்று சொல்லி விடைபெற்றுக் கொண் டாள் மீரா.

இந்தச் சந்திப்பு நிகழ்ந்து கிட் டத்தட்ட மூன்று மாதங்களுக்குப் பிறகு எங்கள் தெருவில் இருந்த சௌந்திரராஜன் மாமாவின், நான் கதையாக எழுதின வீடு இடிக்கப் பட்டது.

ஆறு மாதங்களுக்குள் பளபள வென்று எட்டு லக்ஸரி ஃப்ளாட்டு கள் எழுந்தன. மீரா அங்கு வந்தது போல் தெரியவில்லை. வீட்டை ஏதோவொரு ஃப்ளாட் ப்ரோ மோட்டரிடம் விற்றுவிட்டு வெகு நாட்களாக எதிர்பார்த்துக் கொண் டிருந்த அமெரிக்கக் குடியுரிமை கிடைத்துவிட்டதால் குடும்பத் துடன் யு.எஸ். போய்விட்டதாகக் கேள்விப்பட்டேன்.

அந்த ஃப்ளாட்டுகள் சில வற்றில் மனிதர்கள் இருந்தார்கள். சிலவற்றில் எவருமில்லை. ஆனால், ஒரு நாள் எங்கள் பில்டிங் வாட்ச்மேன் ஒரு தகவலை என்னிடம் கொண்டு வந்தான்.

"அந்தப் புது ஃப்ளாட்ல யாருமே ரொம்ப நாள் தங்கறதில்ல பார்த்தீங் களா?" என்றான் என்னிடம்.

"ஏன்? எனக்குத் தெரியாது. என்ன காரணம்?" என்றேன் சாதாரணமாக.

"யாரோ வீட்டில கசமுசன்னு ராத்திரி நேரத்துல பேசற மாதிரி சத்தம் கேக்கு தாம். அதனால பயந்துகினு எல்லாரும் வீட்டைக் காலி பண்ணிடறாங்களாம்."

எனக்கு 'திக்'கென்றது.

"உனக்கு யார் சொன்னாங்க?"

"அந்த பில்டிங் வாட்ச்மேன்தான்."

"நீ நம்புறியா. நிஜமாவா?"

"நமக்கு இன்னா ஸார் தெரியும். அந்த பில்டிங்ல பேசிக்கிறாங்க. வாட்ச்மேன் கூட சொல்றான். சமயத்துல ராவுலே யாரோ ஒரு வயசான ஆளு முண முணன்னு பேசறாப்பல தோணிச்சு.. ஃப்ளாட்ல யாராச்சும் பேசிக்கினு இருந்திருப்பாங்கன்னு நெனச்சேங்கறான். பேய், கீய் எதுனாச்சும் இருக்குமாயிருக் கும். நம்ம பில்டிங்காண்ட வராதவரை சரி..." என்றபடி போனான்.

'சௌந்திரராஜன் மாமா என்னிடம் சொன்னது நிஜம்தான்' என்று மனசுக்குள் எண்ணிக்கொண்டேன். ஆனால் வாயைத் திறக்கவில்லை. ●

இந்திய ஹாக்கி அணிக்கு இது போதாத காலம். தோல்விகள் ஒரு பக்கம் பாடாய்ப் படுத்திக்கொண்டிருக்க, இப்போது தோல்விகளுக்குப் பொறுப்பேற்று தமது பயிற்சியாளர் பதவியை ராஜினாமா செய்துவிட்டார் ரஜிந்தர்சிங் ஜூனியர். கூடவே இந்திய ஹாக்கி ஃபெடரேஷனுடைய செயலாளரான ஜோதிகுமரனை கடுமையாக விமர்சித்துள்ளார்.

"ஜோதிகுமரன் சொன்ன சொல்லுக்குத்தான் ஃபெடரேஷன் கட்டுப்படுகிறது. காமன்வெல்த் கேம்ஸ் நடக்கும்போது அவர் வீரர்களைத் தம் இஷ்டத்துக்கு மாற்ற முயற்சித்தார். என்னைச் சுதந்திரமாக இயங்க

# "நான் தவறிழைத்து விட்டேன்!"

விடவில்லை" என்று சகட்டுமேனிக்கு புழுதி வாரித் தூற்றியிருக்கிறார். ரஜிந்தர்சிங் இடத்தில் உடனடியாக தமிழகத்தைச் சேர்ந்த பாஸ்கரன் நியமிக்கப்பட்டிருக்கிறார். ரஜிந்தர்சிங்கின் குற்றச்சாட்டுகளுக்குப் பதில் ஏதும் தராமல் மௌனியாக இருந்த ஜோதிகுமரன் கல்கிக்காக மனம் திறந்தார்.

**ரஜிந்தர்சிங் உங்கள் மீது மட்டும் குற்றம் சுமத்துவதேன்?**

"இப்போது சென்னையில் நடந்த சேம்பியன்ஸ் டிராபியின்போதுகூட மின் விளக்குகள், அரசாங்க உதவி போன்றவற்றுக்காகத்தான் ஓடி ஓடி வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த நிலைமையில் எனக்கு அணியின் தேர்வில் தலையிட ஏது நேரம்? ஆட்டத்தின் எழுபது நிமிடங்களும் அவர் தானே கோச் செய்கிறார்... நான் என்ன வாக்கிடாக்கியில் அவருக்குக் கட்டளையிட்டேனா அல்லது அவரது கையைத்தான் பிடித்துக் கொண்டேனா? வெளியேறிய பின் இத்தனையும் சொல்கிறாரே... பணியில் இருந்தபோது ஏன் பேசவில்லை? முன்பு பணியாற்றிய ஜெர்மன் கோச்சும் இதே போல வெளியேறும்போது, சரமாரியாகக் குற்றங்களை வீசிச் சென்றார். இது போன்ற தரமற்ற கோச்சுகளிடம் பாரம்பரியமிக்க இந்திய ஹாக்கி அணியை ஒப்படைத்து நாம்தான் ஏமாந்து விட்டோம். ரஜிந்தர்சிங்கால் இன்று உலக வரிசையில் இந்திய அணி கீழே இறங்கியுள்ளது. சேம்பியன்ஸ் டிராபியில் அவருடைய கோச்சிங் லட்சணங்களைத்தான் எல்லோரும் கண்கூடாகப் பார்த்தார்களே... நான் என்ன புதிதாகச் சொல்ல!"

**அணியின் தேர்வில் மூக்கை நுழைக்கிறீர்களாமே?**

"சமீபத்தில்கூட சிங் பணிவன்போடு 'சாப், உங்களால்தான் நான் கோச் ஆக முடிந்தது' என்றார். அவரை கோச் ஆக்கியது தான் நான் செய்த பெரிய தவறு. முன்னாள் வீரர்களைக்





• ரஜிந்தர்சிங்



• தன்ராஜ்



• பாஸ்கரன்

கொண்ட தேர்வுக் குழுவைக் கூட்டி, கலந்தாலோசித்து, தேர்வுக்குழுத் தலைவரும் கோச்சும் கையெழுத்திட்டால் மட்டுமே மத்திய அரசு வெளிநாட்டுப் போட்டிகளுக்கு அனுமதி கொடுக்கும். அணியின் தேர்வில் திருப்தி இல்லையென்றால் இவர் ஏன் கையெழுத்திடுகிறார்? கோச்சிங்குக்குத் தேவையான எந்தத் தொழில் நுட்பங்களும், சாதுர்யங்களும் அறியாதவர் ரஜிந்தர்.

ஆனால் பாஸ்கரன் நவீன ஹாக்கியில் ஊறியவர். கட்டாயம் இவர் ரஜிந்தர்சிங் போல ஏமாற்றமாட்டார். அடுத்து நடக்கவிருக்கும் உலகக் கோப்பை, ஆசியன் கேம்ஸ் இரண்டிலும் இவருக்கு வாய்ப்புக் கொடுக்கப்படும். இப்போது சர்வதேச ஹாக்கியில் ஏராளமான மாற்றங்கள். இதைச் சமாளிக்க நமக்கு ஒரு வெளிநாட்டுப் பயிற்சியாளரும் கட்டாயம் தேவை. அவர் கூடிய விரைவில் வருவார்."

**இந்திய ஹாக்கி பெடரேஷனுக்கு வருமானம் எந்தளவுக்குக் கிடைக்கிறது?**

"இந்திய கிரிக்கெட் அணிக்கு ஸ்பான்சர் செய்யும் சஹாரா கம்பெனிதான் ஹாக்கிக்கும் நிதியுதவி செய்கிறது. ஆனால் அள்ளிக் கொடுப்பதில் கிரிக்கெட்டுக்கும் ஹாக்கிக்கும் நூறு மடங்கு வித்தியாசம் உண்டு. கிடைக்கும் வருமானம், வாய்க்கும் கைக்குமே போதுமானதாக உள்ளது. கோச்சுகளுக்கு மாத வருமானம் ஏதும் கொடுக்கப்படுவதில்லை. போட்டியில் ஜெயிக்கும்போது கிடைக்கும் பரிசுப் பணத்தை பகிர்ந்து அவர்களுக்கும் தரப்படுகிறது. வருமானத்தை எதிர்பாராது இதை கௌரவப் பணியாகவே அவர்கள் செய்ய வேண்டும்."

**தன்ராஜ் பிள்ளை மீண்டும் அணியில் நுழைய ஆசைப்படுகிறாரே?**



• ஜோதிகுமாரன்

## – புலம்புகிறார்
## இந்திய ஹாக்கி அணிச் செயலாளர்

"தன்ராஜால் சர்வதேச போட்டிகளில் நீண்ட நேரம் தாக்குப்பிடித்து ஆட முடியாது என்று பெடரேஷன் கருதுகிறது. அவரே, 'நான் ஆசிய போட்டிக்குத் தயார்' என்றுதானே சொல்லியிருக்கிறார். அவருக்கே தெரிந்துவிட்டது தம்மால் இனி ஜெர்மனி, ஹாலந்து போன்ற பெரிய அணிகளிடம் ஆட முடியாது என்று."

- ச.ந.கண்ணன்

தொலைக்காட்சி. இதற்கிடையில் பா.ம.க.வின் மக்கள் தொலைக்காட்சியை வெகு சீக்கிரம் கொண்டுவர வேண்டு மென்பதில் ராமதாஸ் தீவிரமாக இருக்கிறார்.

# காத்திருக்கும் அதிர்ச்சி!



* கராத்தே தியாகராஜன்



* உசேன்



* ராமதாஸ்

அதிமுக.வுக்கு எதிராகத் தீவிரப் பிரசாரம் செய்யப் போகிறேன் என்று வாய்ஸ் விட்ட கராத்தே தியாகராஜனை சென்னை பக்கம் இதுவரை காணோம். "இத்தனை மாதம் தலைமறைவாக இருந்துவிட்டீர்கள். தேர்தல் முடிவு தெரியும்வரை பேசாமல் மறைவாக இருங்கள்" என்று போலீஸ் நண்பர்களும் ஆளும் கட்சி நண்பர்களும் அவருக்கு அட்வைஸ் செய்திருக்கிறார்களாம். அதுதான் கராத்தே கப்சிப்பாம்.

உள்நாட்டு ஏகாதிபத்தியம் என்று எதிர் கூட்டணி பிரசார பீரங்கிகள் முழங்கிக் கொண்டிருக்க, பழிவாங்கப்பட்ட தொலைக்காட்சியையும் வளைத்துப் போட்டு விட்டார்கள் என்கிறது ஒரு தகவல். இன்னும் சில காலம் பழைய பேரிலேயே இயங்கி வருமாம் அந்தத் தொலைக்காட்சி.

அம்மாவுக்கு ஆதரவாகக் களமிறங்கியிருக்கும் நடிகர், நடிகைகளுக்கு தேர்தலுக்கப்புறம் அதிர்ச்சி காத்திருப்பதாகக் கிசுகிசுக்கிறது வருமானவரி வட்டாரம். ஆம்! அவர்கள் தாக்கல் செய்த ஸ்டேட்மெண்ட்கள் எடுக்கப்பட்டு, தீவிர ஆய்வுக்காகக் கோப்புகள் உருவாக்கப்படுகிறதாம்.

திருவல்லிக்கேணியில் ஆத்திக மக்களிடையே நல்ல பெயர் வாங்கியிருந்த உசேனுக்கு தி.மு.க. தலைமை இந்த முறை சீட் கொடுக்காமல் அல்வா கொடுத்துவிட்டது. சென்னை பல்கலைக்கழக பொருளியல் துறைத் தலைவராக இருந்து ஓய்வுபெற்ற நாகநாதனுக்கு அடித்தது சான்ஸ். மறைந்த மாறனின் சிஷ்யர் இவர். "மாறன் போட்டியிட்டால் எப்படி வேலை செய்வீர்களோ அதேபோல் செய்ய வேண்டும்" என்று கலைஞர் கட்டளையிட்டு விட, கசப்பை மறந்து கழக உடன்பிறப்புகள் உழைக்கத் துவங்கிவிட்டார்கள். ஆனால் தொகுதி மக்கள் உசேன் உழைப்பைச் சொல்லி, பாராட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

- சஞ்சயன்

# சென்னையில் குகை மனிதர்கள்!

சென்னை கத்திபாரா சந்திப்பிலிருந்து கோயம்பேடு புறநகர் பேருந்து நிலைய வளாகத்துக்குத் திரும்புகிறது ஜவஹர்லால் நேரு சாலை. இதில் ஈக்காடுதாங்கல் தொழிற்பேட்டை - அசோக் நகர் ஆகிய இரண்டு பகுதிகளையும் இணைக்கிறது காசி தியேட்டர் அருகே அடையாற்றின்மீது கட்டப் பட்டுள்ள பாலம். இந்தப் பாலத்தின் நடைபாதை படிக்கட்டுகளுக்குக் கீழே பத்துக்கு நான்கு அடி நீள அகலத்தில் ஒரு கான்க்ரீட் குகை. 1996ல் இந்தப் பாலம் கட்டி முடிக்கப்பட்டது முதல் இங்கேதான் வசிக்கிறார்கள் நாகம்மாள் - ரவி எனும் ஏழைத் தம்பதி.

"ஐம்பது நூறுன்னு வாடகை கொடுத்து குடிசை வீட்டுல இருந்தோம். வூட்டுக் காரரு பெயிண்ட் வேலை பார்த்தாரு. அவருக்கு நுரையீரல் கெட்டுப்போயி வேலைக்குப் போக முடியல. எனக்கு நாற்பது வயசுல திடீர்னு ரெண்டு காலும் வளைஞ்சு போச்சு. என்ன நோவுன்னு தெரியல. வாடகை கொடுக்க முடிய லேன்னு பாத்திரம் பண்டத்தைத் தூக்கி வெளியே வீசிட்டாங்க. அப்போது லேர்ந்து இந்தப் பொந்துதான் எங்கவீடு. ஹைவேஸ்காரங்க, ஆர்.ஐ. எல்லாம் வந்து இதுலே இருக்கக்கூடாதுன்னு சொல்லு வாங்க. அப்புறம் எங்க நெலமைய பார்த்து. அவங்க சிமெண்டு, ரோட்டு வேலை சாமான்கள நம்ம பொந்துல வெச்சு பார்த் துக்கச் சொல்லுவாங்க. அஞ்சு வருஷமா இப்படித்தான் பொழப்பு ஓடுது.." என்று தம் கண்ணீர்க் கதையைச் சொன்ன நாகம்மாவுக்கு இப்போது காதின் கேட்புத் திறன் கணிசமாகக் குறைந்துவிட்டது. பாலத்தின் மீது செல்லும் வாகனங் களின் அதிர்வும், இரைச்சலும் அவ ரது கேட்கும்திறனை காவு வாங்கி விட்டதாகச் சொல்கிறார் அவரது கணவர் ரவி. கோடைகாலப் பகல் களில் உள்ளே இருக்க முடியாது என்பதால் எதிரே இருக்கும் சாலையோரப் பூங்காவின் மர நிழலில் தஞ்சமடைந்து விடும் இந்த எளியவர்களுக்கு மாற் றுடைகூட இல்லை என்பது தான் பரிதாபம். இதைப் பற்றி யெல்லாம் கவலைப்படாமல் தமது குகை வீட்டின் வாசலில் தொடங்கும் இருநூறு அடி நீள சிமெண்ட் நடைபாதையை தினசரி தட்டி சுத்தம் செய்து பொதுச்சேவையும் செய்கிறார் நாகம்மா. "எங்களையும் மனுச மக்களா மதிச்சி ஒரு ரேஷன் கார்டு கொடுத்தா, ரேஷன் கடையிலே அரிசி வாங்கி அரை வயித்தையாவது கழுவிக்குவோம். தரு வாங்களா தம்பி?" என்று கண் கலங்கக் கேட்கிறார்.



படம் : ஸ்ரீஹரி

— ஸ்ரீ

உலகில் முழுக்க முழுக்க நல்ல குணங்களே கொண்ட மனிதர்களும் கிடையாது; முழுக்க முழுக்க கெட்ட குணங்களே கொண்ட மனிதர்களும் நம்மிடம் கிடையாது. நம்மிடம் ஒரே ஒரு நல்ல குணம் இருந்தால்கூடப் போதும். அதை மேலும் வளர்க்க நாம் முயற்சி செய்தால், இன்னும் பற்பல நற்குணங்கள் இயல்பாகவே நம்மிடம் வந்து சேரும்.

ஓர் இளம்பெண் இருந்தாள். அவளுக்கு ஓவியம் வரையத் தெரியும். அவள் ஓர் ஓவியப் போட்டியில் கலந்து கொண்டாள்.

தனது திறமை முழுவதையும் காட்டி ஓர் ஓவியத்தை வரைந்தாள். போட்டியில் அந்தப் பெண்ணுக்கு முதல் பரிசு கிடைத்தது. மிகவும் கலை வேலைப்பாடு மிகுந்த தொங்கும் விளக்கு ஒன்றை போட்டி நடத்தியவர்கள் அவளுக்குப் பரிசாகக் கொடுத்தார்கள். அதைத் தன் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு வந்த அந்தப் பெண், வீட்டின் வரவேற்பறையில் அதனைத் தொங்க



விட்டாள். அதன் அழகையும் கலை நேர்த்தியையும் வீட்டுக்கு வந்த அனைவரும் பாராட்டினார்கள்.

அந்த வரவேற்பறையின் சுவர்கள் புதிய கலைநயம் மிகுந்த விளக்குக்கு ஏற்ப இல்லை என்று அவளுக்குத் தோன்றியது. ஆங்காங்கே கறை படிந்திருந்த சுவருக்குப் புதிய வண்ணம் பூசத் தீர்மானித்தாள். புது வண்ணம் பூசியதும், ஜன்னல்களின் திரைச்சீலைகள் அழுக்காகவும், கிழிந்தும் இருப்பது அவள் கவனத்துக்கு வந்தது. அவற்றைத் துவைத்து மாட்டினாள். இவ்வளவு செய்துவிட்டு, தரை விரிப்பு மட்டும் ஏன் அழுக்காக இருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. அதையும் புதிதாக மாற்றிவிட்டாள். இப்போது அந்த அறைக்கே ஒரு புதுப்பொலிவு வந்துவிட்டது.

அந்தப் பெண் போட்டியில் வென்றதால் கிடைத்த விளக்கை தொங்கவிட்டதில் ஆரம்பித்து, கடைசி



# கடவுளின் கருணை வேண்டுமோ?

மாதா அமிர்தானந்தமயி



யில் அந்த அறைக்கே ஒரு புதுப் பொலிவு வந்துவிட்டது.

அதுபோலத்தான், நம் வாழ்க்கையிலும், ஒரு நல்ல குணத்தை, நல்ல காரியத்தை நாம் பின்பற்ற ஆரம்பித்தால், அதனைத் தொடர்ந்து பல நல்ல குணங்கள் நம்மை வந்து சேரும்; நாம் பல நல்ல காரியங்கள் செய்ய ஆரம்பிப்போம்.

சில பள்ளிக்கூடங்களில், சுமாராகப் படிக்கும் குழந்தைகள், தேர்வில் பாஸ் பண்ணுவதற்குத் தேவையான அளவு மார்க்குகள் வாங்கமாட்டார்கள். அப்படிப்பட்ட மாணவர்கள், தேர்வில் தோல்வியடைந்தால், அவர்களுடைய வாழ்க்கையில் ஒரு வருட காலம் வீணாகிவிடும். எனவே, அவர்களுக்குக் கருணை அடிப்படையில் சில மார்க்குகளை அளிப்பார்கள். ஆனால் இந்த மார்க்குகள் பாஸ் மார்க் வாங்காத எல்லாருக்கும் கிடைக்காது. குறைந்தபட்சம் இவ்வளவு மார்க்காவது வாங்கினால்தான் கருணை மார்க் என்று நிர்ணயிப்பார்கள்.

அதுபோலத்தான், இறைவனும் நம் மீது எப்போதும் தனது கருணையைப் பொழிந்து கொண்டேயிருக்கிறான். ஆனாலும் அதன் பலன் நமக்குக் கிடைக்க வேண்டுமென்றால், நாமும் சிறிது முயற்சி செய்தேயாக வேண்டும். இறைவன் நமக்கு அருள் புரிந்தாலும், அதனை ஏற்றுக் கொள்ளக்கூடிய மனப்பக்குவம் நமக்கு இருக்க வேண்டியது மிகவும் அவசியம்.

பகலில் ஓர் அறைக்குள் கதவை நன்றாக மூடிக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கும் ஒருவர், "எனக்கு மட்டும் ஏன் சூரியன் ஒளி தரவில்லை?" என்று புலம்புவதில் பலனில்லை. சூரியனின் ஒளி எங்கும் நிறைந்திருக்கிறது. அது கிடைக்க வேண்டுமானால் அறையின் கதவுகளை நன்றாகத் திறந்து வைத்திருந்தால் போதும்.

ஒருவர் நமக்கு ஒரு பொருளைத் தர விரும்புகிறார். அவர் அதனைக் கொடுக்கிறபோது, நாம் நன்றி

2

உணர்வோ, அடக்கமோ இல்லாமல், அகங்காரத்துடன் அதனை வாங்க முற்பட்டால், அவர், மனம் மாறி நமக்கு அந்தப் பொருளைக் கொடுக்காமல் போகலாம். இவருக்குக் கொடுப்பதைவிட வேறு யாராவது தகுதியானவருக்குக் கொடுக்கலாம் என்று நினைக்கக் கூடுமல்லவா? ஆக,

# அம்மா!

ஐந்து வயதிலேயே கண்ணன் மீது பக்திப் பாடல்களைத் தானே இயற்றிப் பாட ஆரம்பித்தார் சுதாமணி. அவருக்கு நல்ல குரல் வளம் இருந்தது. தான் எழுதிய பாட்டுக்களைச் சுதாமணி பாடுகிறபோது, அதைக் கேட்க கிராமத்து மக்கள் ஆர்வமுடன் கூடுவார்கள்.

ஐந்து வயதானபோது, சுதாமணி உள்ளூர் பள்ளியில் சேர்க்கப்பட்டார். அவரது அபாரமான நினைவாற்றல், அறிவு கூர்மை, எதையும் சட்டென்று கிரகித்துக் கொள்ளும் திறமை எல்லாம் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்களை வியப்பிலாழ்த்தின. விளையாட்டுப் போல மிக எளிதாகப் பாடங்களை மனப்பாடம் செய்தார்.



தேர்வுகளில் நல்ல மதிப்பெண்கள் வாங்கினார்.

ஒன்பது வயதானபோது, அவரது தாயின் உடல்நலம் மிகவும் குன்றியது. எனவே குடும்ப வேலைகளைச் செய்ய வேண்டிய பொறுப்பு சுதாமணியின் தலையில் விழுந்தது. மாட்டுத் தொழுவத்தைச் சுத்தம் செய்வது முதல் சமையல் வேலைகள் வரை அனைத்தையும் சுதாமணியே செய்யலானார். சுதாமணி பள்ளிப் படிப்பைத் தொடர முடியாமல் போனது. இன்று ஏராளமான பள்ளிகள், மருத்துவ மற்றும் பொறியியல் கல்லூரிகள் துவங்கி லட்சக்கணக்கான மாணவ, மாணவியர் படிக்க வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்துள்ளார் அம்மா.

- மௌலி

ஒருவர் ஒரு பொருளை நமக்குக் கொடுக்க நினைத்தாலும், நமது அகங்காரத்தால், அது நமக்குக் கிடைக்காமல் போவது மாதிரி, நமக்குக் கிடைக்க வேண்டிய, இறைவனின் அருளும், நம் மனம் பக்குவப்படாததன் காரணமாக நமக்குக் கிடைக்காமல் போகலாம்.

சில நேரங்களில், நம்முடைய விவேகமான புத்தி, "இப்படிச் செய்" என்று சொல்லும். ஆனால், அதற்கு மனம் சம்மதிக்காது. புத்தி, "பணிவுடன் நடந்துகொள்" என்று சொல்லும். ஆனால், மனமோ, "நாம் ஏன் தாழ்ந்து போக வேண்டும்? இவருக்கு ஏன் தலை வணங்க வேண்டும்?" என்று மனித ஈகோவைத் தட்டி எழுப்பும். அதன் பலனாக நமக்குக் கிடைக்க வேண்டிய பலன் நமக்குக் கிடைக்காது; நடக்க வேண்டிய காரியங்கள் நடக்காது.

அதனால்தான் அம்மா சொல்கிறேன்... 'இறைவனின் அன்பும் கருணையும் கிடைக்க வேண்டுமென்றால், முதலில் நமக்கு அடக்கம் வேண்டும். அடக்கம் இருந்துவிட்டால், நம் மனதில் அகங்காரம் என்கிற பாம்பு படம் எடுத்து ஆடாது.'

அன்பாய் இரு; அடக்கத்துடன் இரு என்று சொன்னால், வாழ்க்கையில் ஒரு முன்னேற்றமும் அவசியமில்லை என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளக் கூடாது. இந்த சமூகத்தில் நாம் எப்படி வாழ வேண்டும் என்று சந்தேகம் வரலாம்.

ஒவ்வொன்றிற்கும் அதற்குண்டான தர்மம் என்று ஒன்று உண்டு. நாம் அதற்கேற்பத்தான் வாழ வேண்டும். தோட்டத்தில் புகுந்து ஒரு பசு செடிகளைத் தின்றால், "பசுவே... பசுவே, செடிகளைத் தின்னக்கூடாது; இங்கிருந்து போய்விடு" என்று சொல்லலாமா? "ஆய்... ஓய்..." என்று அதட்டி சத்தம் போட்டால் தானே போகும்? அவசியமானால், அதனை அடித்துக்கூட விரட்ட வேண்டியிருக்கும். அதனை அன்பில்லை; அகங்காரம் என்று சொல்லக்கூடாது. அது பசு செய்த தவறைத் திருத்தும் செயலாகும்.

நாம் வயதில் எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும், ஒரு குழந்தையின் களங்கமின்மையை விட்டுவிடக் கூடாது. அதனையும் நம் கூடவே வளர்த்துக்கொள்ள வேண்டும். இன்று மனிதர்கள் பலரின் உடல் வளர்ந்துள்ளது; ஆனால், மனது வளரவில்லை. மனம் வளர்ந்து உலகளவு பரந்ததாக வேண்டுமெனில், முதலில் குழந்தையாக வேண்டும். குழந்தையால்தான் வளர முடியும்.

(அன்பு பெருகும்)

"இன்னும் இருபது வருஷம் கழிச்சு இந்தியா எப்படி இருக்கும்!"

"அப்பவும் தீபகற்பமாத்தான் இருக்கும் சார்!"

- ஞா.ஞானமுத்து





"கால்ல அடிபட்டு பெட்லே இருந்த உங்க மாமியார் இப்ப நல்லா நடக்கு றாங்களே...!"

"அதான் சொன்னேனே... எங்க வீட்டுல நடக்கக்கூடாதது எல்லாம் நடக்குதுன்னு...!"

- தஞ்சை தாமு

"கிரெடிட் கார்டை ஏன் காதுல வெச்சிருக்கீங்க சார்?"

"நான் மூணாவது மசால் ரோஸ்ட் ஆர்டர் பண்ணினப்போ சர்வர் ஒரு மாதிரியா பார்த்தார் சார்!"

- ஞா.ஞானமுத்து





"என் காதலியோட பெயரை வலது கையில பச்சைகுத்தி வச்சிருக்கேன்."

"அதுக்கென்ன?"

"ஏற்கெனவே இடது கையில பச்சை குத்தி வச்சிருக்கிற மாஜி காதலியோட பெயரை எப்படி அழிக்கிறதுன்னுதான் தெரியல!"

- டி.செல்வன்

"**ஊ**ர்லயே முதன் முதலா நம்ம வீட்டுக்குத்தான் ரேடியோ வந்தது. தாத்தா மெட்ராஸ்லருந்து வாங்கிட்டு வந்தாரு. கரண்ட்ல பாடறது. டீ.வி. இருக்குல்ல. அந்த சைஸ்ல பெருசா இருந்தது. அதை வைக்கறதுக்கு ஸ்பெஷலா மர ஸ்டாண்டு பண்ணி ஜன்னலோரமா வச்சு அதும்மேல ரேடியால வச்சு... அதுக்கு ஆண்டனா மாதிரி ஏரியல் வயர்... கம்பியில கட்டி வெளியில நீட்டிக்கிட்டிருக்கும். அதை செட் பண்ணி வச்சிருக்கும். ஸ்விட்ச் போட்டால் உடனே பாடாது. நிதானமா ஆடு ஏறும். இண்டிகேட்டர் மாதிரி ஒண்ணு இருக்கும். அதுல பச்சை கலர் வந்த பிறகு தான்... பாடும்..."

கோபால் பழைய நினைவுகளில் ஆழ்ந்தவனாய்ச் சொன்னான்.

மகள் அஞ்சு அவன் வாயையே பார்த்தாள்.

"அந்த நாள்ல அது பெரிய விநோதம். ரேடியோ எப்படி இருக்குன்னு பார்க்க, உறவுக்காரங்க, தெரிஞ்சவங்க எல்லோரும் வீட்டுக்கு வந்தாங்க. அவங்களுக்கெல்லாம் பாட்டி காபித் தண்ணி போட்டுக் கொடுத்து உபசரிச்சாங்க..."

"காப்பித் தண்ணினா... காப்பி தண்ணியாட்டம் இருக்குமா...?"

"அப்படியில்ல 'திக்'காத்தான் இருக்கும். டீத்தண்ணி, காப்பித் தண்ணின்னு சொல்றது பழக்கம். வீட்டுத் திண்ணைல எப்பவும் நாலு பேர் உட்கார்ந்திருப்பாங்க ரேடியோ கேட்க. நியூஸ் கேட்க நிறைய பேர் வருவாங்க. எல்லாருக்கும் கேட்கணும்னு ஃபுல் சவுண்டு வைப்பாரு தாத்தா. தெருவுக்கே கேட்கும். பாட்டு, நாடகம், சினிமான்னு போகும்போது ஊரே வீட்டைச் சுத்தித்தான் இருக்கும்...".

"ரேடியோவுல சினிமா எப்படித் தெரியும்?"

"சினிமான்னா... ஒலிச்சித்திரம். அதாவது வசனங்களை மட்டும் தொகுத்துப் போடுவாங்க. நடிகர்கள் குரலைக் கேட்கும் போது சினிமா பாக்கறது போலவே இருக்கும்."

"ம்..."

"ரேடியோ வந்தப்ப எனக்கு என்ன வயசு தெரியுமா? உன் வயசு தான்..."

"சின்ன பாப்பாவா?"

"இல்ல... கொஞ்சம் பெரிய பாப்பா. நான் கேட்ட முதல் பாட்டு என்ன தெரியுமா? அகத்தியர்னு ஒரு படம். அதுல வந்த ஒரு பாட்டு...."

"ஞாபகமிருக்கா..."

"ஏன் இல்லாம... தாயிற்சிறந்த கோயிலுமில்லை; தந்தை சொல் மிக்க மந்திரமில்லை. ஆயிரம் உற



பதுலம் சுகுமாரன்

# மார்கோனி



வில் பெருமைகள் இல்லை. அன்னை தந்தையே அன்பின் எல்லை.''

பாடிக் காட்டினான் கோபால்.

''பெற்றோரின் பெருமையைப் பேசும் அந்தப் பாட்டு எனக்கு மனப்பாடம் ஆயிட்டுது. ஸ்கூல்ல பாட்டு போட்டி வச்சப்ப அந்த பாட்டைப் பாடி முதல் பரிசு வாங்கினேன்.''

''என்ன பரிசு?''

''விவேகானந்தர் எழுதிய நூல்னு நினைக்கறேன்...''

''அப்புறம்....''

''ரேடியோ வந்ததால நம்ம வீட்டுக்கு பெரிய அந்தஸ்து வந்ததுபோல இருந்தது. எனக்கு ரொம்பப் பெருமை. என்னைப் பார்த்தால் பசங்க... 'ஏ... ஏ... அவன் வீட்ல ரேடியோ இருக்குடா'ன்னு பேசுவாங்க. சாயங்காலம் ஸ்கூல்லருந்து ரேடியோ கேட்க பையங்க வீட்டுக்கு வருவாங்க. நான் அவங்களுக்குப் பாட வச்சு காண்பிப்பேன். கரண்ட் ஸ்விட்ச் போடறதுன்னா ரொம்பப் பயம். இப்ப உள்ளதுபோல இல்லே அப்பெல்லாம் ஸ்விட்ச் பெருசா இருக்கும். போடும்போது 'டொக்'குனு சவுண்டு வரும், ஸ்பார்க் வரும்... கொஞ்சம் ஜாக்கிரதையா இல்லேன்னா ஷாக் அடிக்கும்...''

''உனக்கு ஷாக் அடிச்சிருக்கா?''

''அவ்வளவா அடிக்காது...''

''ஓஹோ...''

''கேளு. அப்புறம் என்னாச்சு... ஊர்ல எல்லார்க்கும் ரேடியோ வாங்கணும்னு தோணிருச்சு. அப்பெல்லாம் டவுன்ல பெரிய கடைங்கள்லதான் ரேடியோ விற்கும். ரேடியோ வச்சிக்க லைசென்ஸ் எல்லாம் வாங்கணும். சைக்கிளுக்கும் லைசன்ஸ் கட்டணும். ஊர்ல நம்ம வீட்லதான் முதல்ல கரண்ட் வந்தது. அப்புறம் பக்கத்துத் தெரு வாத்தியார் வீட்ல கரண்ட் வந்தது. ரேடியோ வாங்கணும்னா, கரண்ட் கனெக்ஷன் வாங்கணும். ஒருத்தர், ரெண்டு பேர் 'வாங்குனாங்க. முடியாதவங்கள்ல பொறாமை புடிச்சவங்க என்ன பண்ணுவாங்க தெரியுமா... கரண்ட் கட் பண்ணிடுவாங்க...''

''அச்சச்சோ...''

''ம்... பல நாள் இந்த மர்மம் தெரியாமலே இருந்தது. நல்ல நல்ல பாட்டு பாடிக்கிட்டிருக்கும்போது, செய்தி வந்துக்கிட்டிருக்கும்போது பாதியில கரண்ட் போயிடும். நான்தான் ஒரு நாள் கண்டுபிடிச்

சேன்..."

"எப்படி..."

"ஊர் எல்லைல டிரான்ஸ்ஃபார்மர் இருக்கும். கனெக்ஷனை எடுக்கறதுக்கும், சேர்க்கறதுக்கும் லீவர் மாதிரி ஒண்ணு இருக்கும். அதைப் போட்டுத் திருகிட்டுப் போயிடுவாங்க. அதை நான் பார்த்துட்டு தாத்தாகிட்ட சொல்லி, டவுன்ல கரண்ட் ஆபீஸ்லருந்து ஆளுகளை வரவழைச்சு. டிரான்ஸ்ஃபார்மர்ல தப்பு பண்ண வங்களை துரத்திப் பிடிச்சு... ஒரே ரகளை..."

"நிஜமாப்பா..."

"நம்பலையா? சரிவிடு. அப்புறம் அந்த ரேடியோ ரொம்ப வருஷம் உழைச்சது. மத்த வீட்டு ரேடியோங்க அடிக்கடி ரிப்பேராய்டும். ஏன்னா... அதெல்லாம் டூப்ளிகேட். 'டெல்லி செட்'டுனு தனி பேரே உண்டு அதுங்களுக்கு. நம்ம வீட்லருந்தது ஒரிஜினல்.."

"இப்ப அது எங்கே?"

"ஒரு முறை ரிப்பேராச்சு. உதிரி பாகம் கிடைக்கலே. மெட்ராஸ் போனாத்தான் கிடைக்கும்ங்கற நிலைமை. வால்வு செட்டு அது. வேற புது ரேடியோ வாங்கினோம். எதுவும் முதல்ல வாங்கினதுபோல இல்லை. அப்புறம் கரண்ட் இல்லாம செல்லுல பாடற ரேடியோ, சின்ன டிரான்ஸிஸ்டர், டூ இன் ஒன். இப்ப காம்பாக்ட் டிஸ்க்குனு நிறைய வந்தாச்சு. எல்லாம் 'யூஸ் அண்ட் த்ரோ' ரகம்போல ஆயிடுச்சு. ஆரம்பத்துல வந்த ரேடியோ போல எதுவும் இப்ப உறுதியா உழைக்கறதில்ல. எலக்ட்ரானிக் சமாச்சாரமெல்லாம் தொட்டாச்சிணுங்கியாட்டம். சின்ன மிஸ்டேக்குன்னாலும் மொத்தமும் பொசுக்குனு போயிடுது..."

"எல்லாம் சரிப்பா. நான் கேட்டதுக்கு நீங்க பதிலே சொல்லலையே..."

"என்ன கேட்டே?"

"ரேடியோவைக் கண்டுபிடிச்சது யாருன்னு கேட்டேன்.."

"ஆமால்ல. நீ ரேடியோன்னு சொன்னதும் எனக்குப் பழைய ஞாபகம் வந்துருச்சு. ஸ்கூல்ல மிஸ் இதெல்லாம் சொல்லிக் கொடுத்திருப்பாங்களே..."

"இது எங்களுக்கு அஸைன்மெண்ட். நாங்கதான் பதில் கண்டுபிடிச்சு எழுதிக்கிட்டுப் போகணும். மொத்தம் நாலு கேள்வி. இது முதல் கேள்வி. சொல்லுங்கப்பா, ரேடியோவைக் கண்டுபிடிச்சது யாரு..."

"வந்து.. ஏதோ... கோமேனின்னு வரும்..." என்று கோபால் தடுமாறிக் கொண்டிருக்கும்போது, அவனைக் கடந்துபோன மனைவி ஸ்வேதா,

"கோமேனி... ஈரான் நாட்டு முன்னாள் அதிபர். இறந்து போய்ட்டாரு. ரேடியோவைக் கண்டுபிடிச்சது மார்க்கோனிங்க' என்று சொல்லிவிட்டுப் போனாள். கோபால் அசடு வழிந்தான்.

அடுத்த கேள்விகளுக்குப் பதிலைத் தெரிந்துகொள்ள, குழந்தை அம்மாவைப் பின் தொடர்ந்தது. ○

"பணத்தைவிட எனக்கு மனுஷன்தான் முக்கியம்..."

"அப்புறம் ஏன் டாக்டர் நீங்க ஆபரேஷன் பண்றீங்க?"

- கே.ஆனந்தன்



# அருள்வாக்கு



# லஞ்சம்!

மனுஷ்ய ஸ்பாவத்தைப் பார்த்தால் ஸொத்து ஸ்வதந்த்ரம் உள்ளவன்தான் லஞ்சம் வாங்குகிற வாய்ப்பு குறைச்சல். இப்படி நான் சொன்னால் நீங்கள் ஒப்புக் கொள்ளாமல் சண்டைக்கு வரலாம். பேர் பேராக ஆஸாமிகளைக் காட்டி, 'லக்ஷம், பத்து லக்ஷம் என்று சேர்ந்த பிற்பாடும் இவர்களெல்லாம் இரண்டு கையாலும் வாங்கிக் கொண்டே இருக்கிறார்களே!' என்று கேட்கலாம். ஆனாலும் இப்படி வாழ்க்கையே பணம் தான் என்று பணத்துக்காகப் பறக்கிறபோக்கு நம்மிடையே ஏற்பட்டது ஸமீப காலத்தில் தான். ஆத்ம ஸம்பத்து தேய்ந்துகொண்டே வந்து, அதே மையத்தில் நூதன நூதனமாக போக்யப் பொருள்கள் கடைக்கு வருவதாகவும், பேப்பர் ரூபாயென்றும், அதை லக்ஷம் கோடி என்று பாங்க் என்பதாக ஒன்றில் எவ்வளவு வேண்டுமானாலும் போட்டு வைக்கலாம் என்றும் ஏற்பட்ட பிற்பாடுதான் நம் ஜனங்களுக்குப் பணமே குறி, பணம் சேர்ப்பதே வாழ்க்கை லக்ஷ்யம் என்று ஆனது. இதற்கு முந்தி, போக்ய வஸ்துகளுக்கு ஓர் அளவு இருந்தவரையில், இருந்த வஸ்துகளின் அநுபோகத்தையும் கட்டுப்படுத்தும் சாஸ்த்ரங்களில் பொதுவாக ஜனங்களுக்கு பயம் இருந்தவரையில், பாங்கில் ஸர்வ ஜாக்ரதையாக எத்தனை வேண்டுமானால் போட்டு வைத்துக்கொள்ள இடம் இல்லாத வரையில், நம்முடைய மக்களுக்குப் பணத்தில் இத்தனை ஆசை இருக்கவில்லை. அதனால் பணக்காரர்கள் லஞ்சம் வாங்கும் வாய்ப்பு அப்போது ரொம்பக் குறைவுதான். இப்போதுங்கூட, 'கம்பேரடிவ்'வாக (ஒன்றுக்கொன்று ஒப்பிட்டு)ப் பார்த்தால், பணமே இல்லாதவன் பதவிக்கு வந்தால் 'கண்டது காணாதது மாதிரி' என்கிறபடி, வசதி படைத்தவனைவிட ஜாஸ்தியாகத்தான் பணத்தாசை பிடித்துக் கைநீட்டலாம். ஸமத்வம் என்று சொல்லிக்கொண்டு இம்மாதிரியான நடைமுறை உண்மைகளை மறந்து தர்மத்துக்கும் நீதிக்கும் ஹானி செய்வது உசிதமல்ல.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

'சென்னைப் பட்டணம்; எல்லாம் கட்டணம்' என்று தொப்பி, ஃப்ராக் அணிந்து, பிரபுதேவாவுடன் ஆட்டம் போட்ட குட்டிப் பெண் இன்று வளர்ந்துவிட்டார். 'நீ வரக் காத்திருப்பேன்', 'சண்டே 9.30 டூ 10.30' என இரண்டு தமிழ்ப் படங்களில் (!) ஹீரோயினாக நடித்து, அதன் ரிலீஸுக்காகக் காத்துக்கிடக்கிறார். யாரென்று கேட்கிறீர்களா...? நம்ம 'அண்ணாமலை' கல்யாணிதான்! "எக்ஸ்கியூஸ்மி, நான் இப்போ ஹீரோயினாயிட்டேன். இன்னமும் என்ன கல்யாணி... பூர்ணின்னு கூப்பிடுங்க... அதான் என் பேரு" என்று திருத்துகிறார். உபயம், நியூமராலஜியாம்.

**அப்போ ஸ்கூல்?**

"இப்போ தபால் மூலமா பத்தாவது படிக்கிறேன். இனி என் தெய்வம் தபால்காரர் தான்."

**பேபி டூ ஹீரோயின், இசுர் பதவி உயர்வு எப்படியிருக்கு?**

"பேபின்னா என்ன குறும்பு வேணும்னாலும் செய்யலாம். 'செல்லம், சமர்த்து'ன்னு கன்னம் கிள்ளி கையில ரெண்டு கிராக் ஜாக் பாக்கெட்டைத் திணிப்பாங்க. ஹீரோயின்னா அடக்கம், ஒழுக்கம் வேணும். ஆனாலும் 'மேடம் சாப்பிட்டீங்களா, நிழல்ல போய் உட்காருங்க'ன்னு ஹீரோயினுக்கு மரியாதை எல்லாம் பலமா இருக்கு. அனுபவிக்கறேன் வாழ்க்கையை."

**டூயட் பாட கூச்சம் இருந்ததா?**

"இருந்துச்சாவா? எக்கச்சக்கமா, ஆனா எனக்கில்லே. என்கூட நடிச்ச ஹீரோக்களுக்கு! அவங்க எல்லாம் காதல் தடுப்பு ஊசி போட்டிருக்காங்கன்னு நினைக்கறேன்!"

**சினிமா மேலே ஏன் இவ்வளவு பைத்தியம்?**

"எனக்கு கேமரா முன்னாடி நிக்கறது பிடிக்கும். என் முகத்தை ஸ்க்ரீன்ல பார்க்கப் பிடிக்கும். என்னைச்

# "அசின், நயன்...
# ஜெயிப்பே...



சுத்திக்கிட்டு ஆட்டோகிராப் வாங்கும்போது கால் ரெண்டும் தரையில இருக்காது. ரொம்ப உயிரு சினிமான்னா. இனி பாருங்க, எப்படி கலக்கப் போறேன்னு."

**டி.வி.?**

"ஜெயாவுல குட்டீஸ் நிகழ்ச்சி பண்ணினேன். அப்புறம் பதினேழு சீரியல்கள் பண்ணி நல்லா அழுதாச்சு. இனியும் நான் டீ.வி.யில வருவேன். ஆனா அது என் படத்தோட காட்சி, பாடல்களாத்தான் இருக்கும்."

**அஸின், நயன்தாராவை ஜெயிக்க வலு விருக்கா?**

"இப்போ நான் நிக்கறது சினிமாவோட முதல் படியில. எட்டு மேலே எட்டு வைச்சு முன்னேறினா அஸின், நயன்தாரா என்ன... யாரையுமே ஜெயிக்கலாம். ஆனா இப்போ அவங்களை அண்ணாந்து பார்க்கிற லெவல்லதான் இருக்கேன்."

**தொல்லை ரசிகர் யாராவது இருக்கணுமே?**

"யா... யா... என் நிழலா இருந்தாரு ஒருத்தரு. எனக்கு எப்பப்போ எக்ஸாம், பிறந்தநாள்னு எங்கம்மாவைவிட அவருக்குத்தான் அத்துபடி. ஸ்கூலுக்கு லெட்டர்ஸ் எல்லாம் வரும். சார், நான் ஹீரோயின் ஆனதிலிருந்து ஆஃப் ஆயிட்டாரு."

**பிடித்த நடிகை?**

"கமல்ஹாசன்."

**அவ்வை சண்முகியா?**

"ஹா... ஹா... ஹா... எனக்கு சினிமான்னாலே கமல்தான். அவர் நடிப்போட இலக்கணம், இலக்கியம், காப்பியம். அவர் இதயத்துல ஸ்டெதஸ்கோப் வைச்சா அது லப்டப்னு அடிக்காது. ஸ்டார்ட், ஆக்ஷன்னுதான் துடிக்கும். அவர்..."

**போதும். ஒரு நடிகைகூடவா பிடிக்காது?**

"தமிழில் என் டேஸ்ட்டுக்கு எந்த நடிகையும் இல்லை. ஸ்ரீதேவி, ராணி முகர்ஜி, மஞ்சுவாரியர்னு எல்லை தாண்டிய ரசனை என்னுடையது."

**இப்போ சென்னை எப்படியிருக்கு?**

"அப்படியே. சென்னைப் பட்டணம்; எல்லாம் கட்டணம்!'"

- **சநகன்**

படம் : **ஆண்டனி ஸ்ரீதர்**

ஒரு கட்டைவண்டி குடை கவிழ்கிறது; தீப்பற்றிக்கொள்கிறது. ஒரு படகு ஜலத்தில் அமிழ்கிறது; ஒரு மோட்டார் மரத்தில் முட்டிக்கொள்கிறது; ஒரு நாடகக் கொட்டகையில் கல் விழுகிறது அல்லது கேவலம் ஒரு அநாதை ஸ்திரீ கிணற்றில் விழுந்துவிடுகிறாள். இந்தக் கட்டுரையின் அவசியத்துக்காக அந்த அநாதை ஸ்திரீ கூடக் கிணற்றில் விழ முன்வராவிட்டால், கல்யாண வீட்டில் ஒரு துஷ்டப்பிள்ளை தூண்மேல் ஏற முயன்றாவது கீழே விழட்டும். அதுவும் இல்லையென்றால், வெயில் காலத்தில் பொதுக்கூட்டத்தின் மத்தியில் யாராவது ஒருவர் மூர்ச்சையடைந்தாவது விழுந்து வைக்கட்டும். இம்மாதிரி நெருக்கடியான சந்தர்ப்பங்களில் நாம் எல்லோரும் என்ன செய்வோம், என்ன செய்கிறோம் என்பதை ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்ப்போமாக.

விபத்து நேர்ந்த இடத்திலிருந்து அவசரமாய் ஓடிப்போகிறவர்கள் ஒருவகை. அந்தத் துஷ்டப் பையன் தூண் மேலேறி விழுந்தானல்லவா? அவன் விழுந்துவிட்டதை ஸ்ரீமான் கிருபாசமுத்திரம் பார்த்துவிடுகிறார். ஓட்ட ஓட்டமாய் வாசல்புறம் ஓடுகிறார். அங்கிருப்பவர்களைப் பார்த்து, "ஸார்! போங்கோ, ஸார்! உள்ளே போய்ப் பாருங்கோ, ஸார்! பையன் விழுந்துவிட்டான், ஸார்! அநியாயமாய் விழுந்துட்டான் ஸார்" என்று பரிதாபமாகக் கதறுகிறார்.

கஷ்டத்தைப் பார்க்க விரும்பாதவர்களில் சிலருக்குக் கடுமையான கோபம் கூட வருவதுண்டு. "நான் கேக்கறேன், இந்தப் பயல் எதற்காகத் தூண்மேல் ஏறுகிறான்? உடம்புக் கொழுப்புதானே? ஊம்?" என்று சத்தம் போடுவார்கள்.

ஆனால், இப்படிக் கஷ்டத்தைக் கண்ணால் காணச் சகியாதவர்கள் நம் நாட்டில் சிறுபான்மையோர்தான் என்று நினைக்கிறேன். மற்ற பெரும்பான்மை ஜனங்கள் விபத்து நடந்த இடத்தைவிட்டு நகர மாட்டார்கள். 'கலாட்டா'வைப் பூராவும் பார்த்துவிட வேண்டுமென்பது அவர்கள் ஆசை!

ஒரு தடவை மயிலாப்பூரில் சில குடிசைகள் தீப்பற்றிக்கொண்டன. தீ வெகு வேகமாகப் பரவி வந்தது. தீப்பிடித்த பத்து நிமிஷ நேரத்திற்குள் சுற்றுப்புறமெங்கும் ஒரே கூட்டம் கூடி விட்டது. சற்று நேரத்தில் சென்னை நகர்வாசிகள் அனைவரும் அங்கே வந்து கூடிவிடுவார்கள் என்று தோன்றிற்று. ஒரே கூச்சல், ரகளை, அழுகை, புலம்பல்.

தீப்பற்றிய குடிசைகளுக்குப் பக்கத்தில் வக்கீல்கள், உத்தியோகஸ்தர்கள் முதலியோர் குடியிருந்த ஒரு வீதி இருந்தது. சீக்கிரம் ஏதாவது ஏற்பாடு செய்யாவிட்டால் அந்த வீதிக்கும் நெருப்பு வந்துவிடும். எல்லோரும் அவரவர் வீட்டு வாசலில் வந்து கவலையோடு நின்றார்கள்.

ஒருவர் "ஸார் ஃபயர் என்ஜி (Fire Engine)னுக்கு டெலிபோன் பண்ணணுமே!" என்றார்.

அடுத்த வீட்டு வாசலில் நின்றவர் "ஆமாம், ஸார்! ஃபயர் என்ஜினுக்கு யாராவது டெலிபோன் பண்ணினால் தேவலையே!" என்றார்.

எதிர் வீட்டுக்காரர், "ஏன் ஸார்! யாராவது ஃபயர் என்ஜினுக்கு டெலிபோன் பண்ணினானா, இல்லையா?" என்று கேட்டார்.

அவருக்கு அடுத்த வீட்டுக்காரர், "பார்த்தீர்களா, ஸார்! இவ்வளவு பேர் கும்பல் போட்டுண்டு நிற்கிறானே; யாராவது ஒருத்தர் ஓடிப்போய் ஃபயர் என்ஜி னுக்கு டெலிபோன் பண்ணுகிறானா, பாருங்கோ!" என்றார்.

இன்னொருவர், "அதெல்லாம் பண்ணமாட்டா ஸார், பண்ணமாட்டா! சுத்த சோதாப் பசங்கள்!" என்றார்.

இவர்கள் இப்படிச் சொல்லிக் கொண்டிருப்பதற்குள் ஃபயர் என்ஜின் வந்துவிட்டது. வந்தும் என்ன? அங்கே கூடியிருந்த ஏராளமான கூட்டம் ஃபயர் என்ஜின் வேகமாய்

# ஆசை!

அங்குமிங்கும் போவதற்குத் தடையாக நின்றது. ஃபயர் என்ஜினுக்கென்று பூமிக்கடியில் புதைத்திருக்கும் ஜலத்தொட்டியைத் திறக்கப்போனால் அங்கே நூறுபேர் கூட்டம்.

தீப்பிடித்த இடத்தின் சுற்றுப்புறத்தில் கூடிய ஜனங்கள் சுமார் 10,000 பேர் இருக்கலாம். இவர்களில் ஒரே ஓர் ஆசாமி அங்கே வெகு பாடுபட்டுக் கொண்டிருந்ததைக் கவனித்தேன். அந்தப் பதைபதைக்கும் வெயிலில் அவர் குடைகூட இல்லாமல் வியர்க்க விறுவிறுக்க ஓடி உழைத்தார். எங்கெங்கு நெருப்பு கொஞ்சம் குப்பென்று கிளம்புகிறதோ அங்கெல்லாம் பாய்ந்து செல்வார். எல்லாரையும் உற்சாகப்படுத்துவார்; அதட்டுவார். "டெடெடேடே!" என்பார். "ஓஹோஹோ!" என்பார். "ஓடியா! ஓடியா!" என்பார். அன்றைய தினம் அதிகமாக தேக சிரமப்பட்டவருக்கு ஒரு மெடல் கொடுப்பதானால் அவருக்குத்தான் கொடுக்க வேண்டும். ஆனாலும் அந்த போலீஸ் ஜவான் ஒரு பூனைக்குட்டியையாவது நெருப்பிலிருந்து காப்பாற்றவில்லை; ஒரு செம்பு தண்ணீராவது தீயில் கொட்டவுமில்லை (அடிக்கடி அவர் வாயிலிருந்து புகையிலை எச்சில் உமிழ்ந்ததினால் நெருப்பு ஏதாவது அணைந்திருக்கும் பட்சத்தில், அந்த புண்ணியம் அவருக்குச் சேர வேண்டியதுதான்.

ஏதாவது விபத்துகள் நேரிடும் போதும் நெருக்கடியான சந்தர்ப்பங்களிலும் காரியம் எது செய்ய வேண்டுமோ அதை உடனே உணர்ந்து திறமையாகச் செய்கிறவர்கள் எங்கேயுமே கொஞ்சம் அருமை. நம் நாட்டிலோ அபூர்வம் என்றே சொல்லலாம்.

- கல்கி களஞ்சியத்திலிருந்து...

வானதி பதிப்பகம்



# அழகி

**தே**வியக்கா தனக்கு வரும் மாப்பிள்ளை எப்படி இருக்க வேண்டும் என்று கூறியபொழுது, எனக்குப் பெரிதாக ஒன்றும் தோன்றவில்லை.

ஆனால் இப்போது நினைத்துப் பார்க்கும்பொழுது ஒன்று புரிந்தது. பதினெட்டு வயது என்பது கனவுகளால் நெய்யப்பட்ட வயது. தனது வாழ்க்கைத் துணை குறித்து, ஆயிரமாயிரம் கனவுகளுடன் வளைய வரும் வயது அது. எல்லோரும் கனவு காண்பார்கள். ஆனால் கனவில் ஒரு உறுதி வேண்டும். அந்த உறுதி தேவியக்காவுக்கு இருந்தது.





எனவே தேவியக்கா, தனது கல்லூரிப் படிப்பை முடிக்கும் வரையில், அவளை வீழ்த்த நினைத்த எந்த ஒரு ஆணுக்கும் மயங்கவில்லை.

அந்தக் காலகட்டத்தில் எங்கள் ஊரில், வீட்டுக்கு மிகவும் பயப்படும் பல பெண்களும், பசங்களின் மிகச் சுலபமான உத்திகளுக்கு எல்லாம் வீழ்ந்து கொண்டிருந்தனர்.

வீட்டு வாசலிலிருந்து கல்லூரி வாசல் வரை குனிந்த தலை நிமிராமல் செல்லும் கீழவீதி உமாவை, கவர்ச்சியான தோற்றமேதும் இல்லாத செந்தில், அதிக சிரமமெல்லாம் படாமல், 14 மாதங்கள் வரை சலிக்காமல், ஒரு விசுவாசமான நாய்போல, அமைதியாகப் பின்தொடர்ந்து சென்றே வீழ்த்தினான். பத்தாவது ஃபெயிலான பரிமளாவை, குமார், தான் நடத்தி வந்த ட்யூஷன் சென்டரில், எட்டாவது மாணவர்களுக்கு மச்சராக்கிக் காதலித்தான்.

இத்தனை பேருக்கு மத்தியிலும் தேவியக்கா மட்டும் தெளிவாக இருந்தாள். தனது கனவு ஆணுக்கு நிகரில்லாத எந்த ஒரு ஆணையும், திரும்பிக்கூட பார்க்கவில்லை.

யாராரோ, எப்படி எப்படியோ முயற்சித்தார்கள். எனது அண்ணன்கூட அவ

# ஜி.ஆர்.சுரேந்தர்நாத்





4 வாரத் தொடர்

2

ளுக்கு ஒரு காதல் கடிதம் கொடுத்துப் பார்த்தான். தேவியக்கா, அந்தக் கடிதத்தை எனது அப்பாவிடம் காண்பிக்க... அப்பா விட்ட ஒரே ஒரு அறையில் மிரண்டுபோன அண்ணன், கொஞ்ச நாளைக்குச் சந்திக்கும் பெண்களையெல்லாம் "வாங்க சிஸ்டர்.." என்றுதான் அழைத்துக் கொண்டிருந்தான்.

கல்லூரிப் படிப்பை முடித்த தேவியக்காவுக்கு, அவர்கள் வீட்டில் மாப்பிள்ளை தேட ஆரம்பித்தார்கள். ஒரே மகள் என்பதால் தேவியின் அப்பா அலசி, ஆராய்ந்து ஒரு இன்ஜினியர் மாப்பிள்ளையைப் பார்த்தார். ஒரு தனியார் கம்பெனியில் அப்போதே எட்டாயிரம் ரூபாய் சம்பளம்.

இன்ஜினியர் மாப்பிள்ளை, தேவியக்காவைப் பெண் பார்க்க வந்தபோது, நானும் சென்றிருந்தேன். மாப்பிள்ளை ஒன்றும் குறை சொல்லும்படியாக இல்லை. ஏறத்தாழ அக்காவின் எதிர்பார்ப்புக்கு ஏற்றாற்போல்தான் இருந்தார். அதனால் தேவியக்காவுக்கும் பிடித்திருக்கும் என்றுதான் நினைத்தேன்.

ஆனால் தேவியக்காவுக்கு பிடிக்கவில்லை.

"ஏண்டி பிடிக்கலங்கற? மாப்ள நல்லாத்தானே இருக்காரு" என்றார் தேவியின் அம்மா.

"லேசா தெத்துப்பல்லு"

"நாங்க பாக்கவே இல்ல..."

"சிரிக்கறப்ப தெரியுது"

"அவ்ளோதானே... மாப்பிள்ளய சிரிக்காம இருக்கச் சொல்லிடலாம்" என்று ஜோக்கடித்தார் என் அம்மா. "இன்ஜினியர் மாப்பிளம்மா. மாசம் எட்டாயிரம் சம்பாரிக்குறாரு" என்றார் தேவியின் அப்பா. "கொஞ்சம் தெத்துப் பல்லு. அவ்வளவுதானே. மத்தபடி நல்லாத்தானே இருக்காரு" என்றார் தேவியின் அம்மா. "எனக்குப் பிடிக்கல. வேண்டாம்னா வேண்டாம்" என்று தேவியக்கா முடிவாகக் கூறிவிட்டுச் செல்ல, அனைவரும் அமைதியானார்கள்.

பிறகு இன்ஜினியர் மாப்பிள்ளை, எங்கள் தெருவையே சேர்ந்த வாத்தியார் மகளைக் கல்யாணம் செய்துகொள்ளும் வரை, தேவியின் அம்மா, தனது மகளிடம் எவ்வளவோ கேட்டுப் பார்த்தார். தேவி அசைந்துகூட கொடுக்கவில்லை.

இதுபோல் தேவியக்கா பல மாப்பிள்ளைகளை வழுக்கை, குள்ளம்... என்று நிராகரித்துக்கொண்டே வந்தாள். ஒரே பெண் என்று செல்லம் கொடுத்து வளர்த்ததால், தேவியின் வீட்டிலும் மகளுக்குப் பிடிக்கும் மாப்பிள்ளையைத்தான் மணம் முடித்துவைக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தனர்.

இதற்கிடையே, சீரியஸான படத்தில் திடீரென்று வந்து செல்லும் நகைச்சுவைக் காட்சி போல வந்து சேர்ந்தார் என் பெங்களூர் மாமா. என் அம்மாவின் கடைசித் தம்பி.

சிறுவயதிலேயே பெங்களூருக்கு பிழைக்கச் சென்றவர், படிப்படியாக முன்னேறி ஹோட்டல், டிராவல்ஸ், சினிமா தியேட்டர் என்று நல்ல காசு. பெங்களூர், மல்லேஸ்வரத்தில் சொந்த வீடு... கார்... என்று எங்களுக்கெல்லாம் எட்டாத உயரத்தில் இருந்தார். வியாபாரத்தில் நன்கு கால் ஊன்றிய பிறகு, முப்பத்திரண்டு வயதுக்கு மேல்தான் திருமணத்தைப் பற்றியே சிந்திக்க ஆரம்பித்தார்.

ஒருமுறை அப்பாவுக்கு உடம்பு சரியில்லை என்று அவரைப் பார்க்க வந்த மாமா, தேவியைப் பார்த்துவிட்டு, "ஏன்க்கா... பக்கத்து வீட்டு ஜோசியரு நம்மாளா?" என்றார் அம்மாவிடம்.

"ஆமாண்டா... ஏன்?"

"ஒரு யோசனை..."

"என்ன?"

"அந்தப் பொண்ணு பேரு என்ன?"

"ம்... தேவி." "அதை எனக்குக் கட்டித் தருவாங்களான்னு கேட்டுப் பாரேன்" என்று மாமா கூற, அம்மா என் முகத்தைப் பார்த்தாள்.

நான் கஷ்டப்பட்டு சிரிப்பை அடக்கிக் கொண்டேன். மாமா ஐந்தடி உயரம் கூட இருக்கமாட்டார். வழுக்கைத் தலை. கூடவே நல்ல தொப்பை. நடக்கும்போது ஒரு மாதிரியாகக் காலை விரித்துக் கொண்டு நடப்பார்.

அம்மா நாசூக்காக, "அவ வர்ற மாப்பிள்ளையை எல்லாம் ஒதுக்கிட்டிருக்கா. உன்னைக் கட்டிக்க ஒத்துக்குவாளோ, மாட்டாளோ?" என்றார் மாமாவிடம்.

"நம்ம வசதியைப் பத்தி எடுத்துச் சொல்லு. ஒத்துக்குவாங்க."

"அவங்களும் வசதில ஒண்ணும் குறைச்சல் இல்லடா. பேருக்கு ஜோசியம் பாக்குறாரு. இந்த வீட்டையே சொந்தமா வாங்கித்தான் வந்தாங்க. கடைத் தெருவுல ஏழெட்டு கடைங்க வாடகைக்கு விட்டுருக்காங்க. ஒரு காலனி வீடு இருக்கு. எல்லாம் சேத்து வாடகையே பதினஞ்சாயிரத்த தொட்டுடும். அப்புறம் வயக்காடு வேற இருக்கு."

"ம்ஹ்ம்... பதினஞ்சாயிரம். நான் மாசம் எவ்ளோ சம்பாதிக்கிறேன் தெரியுமா? ஒரு லட்சத்தைத் தாண்டிடும். என்ன சொல்ற? கேக்கலாமா?"

"டேய்... என்னடா? எப்படி... திடீர்னு போயி..."

"என் மனைவி என் பேச்சைக் கேட்டுத்தான் நடப்பா!"

"ஆச்சரியமா இருக்கே?"

"ஆனா என்ன பேசணும்ங்கறத முந்தின நாளே எனக்குச் சொல்லிடுவா!"

- அம்பை தேவா



"இங்க பாரு. எனக்கு எல்லாமே பிசினஸ்தான். வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டுன்னு பேசிடணும் ஒத்துக்கறா னான்னு பார்ப்போம். இல்லன்னா வேற பொண்ணு" என்று எழுந்தார் மாமா.

அம்மாவுடன், ஜோசியர் வீட்டுக்குச் சென்று திரும்பிய மாமாவின் முகம் இருண்டு போயிருந்தது.

"கொஞ்சம் அழகா இருக்கோம்னு திமிரு. இங்க பாருக்கா, இன்னும் மூணே மாசத்துல இவளைவிட அழகானவளை கல்யாணம் பண்ணிக் காட்டுறேன் பாரு" என்று சவால் விட்டுவிட்டு, உடனடியாக பெங்களூர் கிளம்பினார் மாமா.

"என்னாச்சும்மா?" என்றேன்.

"இவனுக்கு நல்லா வேணும். வேண்டாம்னு சொன்னாக் கேட்டாத்தானே. தேவி வீட்ல, 'தம்பி, பெங்களூர்ல நல்லா சம்பாதிச்சுக்கிட்டிருக்கான். வீடு, காருல்லாம் வாங்கிட்டான். தேவியைக் கட்டிக்க பிரியப்படறான்'னேன். அவங்களுக்கும் ஆசைதான். 'தேவி ஒத்துக்குவாளான்னு தெரியல. கேட்டுச் சொல்றோம்'னு உள்ள போனாங்க. அவ, இவன் காது படவே, 'வேற இடம் பாக்கச் சொல்லுங்க'ன்னு சத்தமா சொன்னா. இவன் விர்ருன்னு கிளம்பி வந்துட்டான்" என்றார் அம்மா.

சொன்னபடியே மூன்றே மாதத்தில், பெங்களூரிலேயே ஒரு அழகான பெண்ணைப் பார்த்துத் திருமணம் செய்து கொண்டார் மாமா.

பெங்களூரில் நடந்த மாமா கல்யாணத்துக்குச் சென்றுவிட்டு வந்த நான், தேவியக்காவிடம் வருத்தமாகக் கூறினேன்.

"பேசாம நீயே கல்யாணம் பண்ணியிருக்கலாம்க்கா. செம ரிச்சா கல்யாணம் நடந்துச்சு. மாமா அவரு யூஸ் பண்றதுக்குன்னே மூணு காரு வச்சிருக்காரு."

"அய்ய... பெரிய காரு... காரையா கட்டிப்புடிச்சு குடித்தனம் நடத்தப் போறேன். உங்க மாமாவுக்கு இருந்தாலும் பேராசைடா. தகர டப்பாவை நாலு பக்கமும் நசுக்கி, கண்ணும் காதும் வச்ச மாதிரி இருக்காரு. என்னைக் கட்டிக்கணுமா? உங்க மாமாவைக் கல்யாணம்



''குண்டடிபட்டு ஹீரோ செத்துக்கிடக்கற காட்சில அவர் நடிப்பு தத்ரூபமா இல்லியே?''

''அவருக்கு சுட்டுப் போட்டாலும் நடிப்பு வராதே!''

- அம்பை தேவா

பண்ணிக்கிறதுக்கு, நான் யாரையும் கல்யாணம் பண்ணிக்காமலே இருந்துடுவேன்" என்றாள் தேவியக்கா.

**கா**லம் வேகமாக ஓடியது. குஷ்பு போய், சிம்ரனும் வந்தபாடாயிற்று... அக்கா விருப்பப்பட்டாற்போன்ற மாப்பிள்ளை மட்டும் கிடைக்கவே இல்லை.

வீட்டில் போரடிக்கிறது என்று தேவியக்கா கம்ப்யூட்டர் கிளாஸ் செல்ல ஆரம்பித்தாள்.

ஒரு நாள் கிளாஸுக்குச் சென்றுவிட்டு வந்த தேவியக்கா, ''பாபு... உன்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்'' என்றாள்.

"என்னக்கா?"

"ம்... நான் ஒருத்தரை லவ் பண்றேன்" என்ற தேவியக்காவை, நான் ஆச்சரியத்துடன் நோக்கினேன்.

(தொடரும்)

# எறும்பிலிருந்து ரோபோவுக்கு...

ஏ.ஐ. என்னும் (ஆர்ட்டிஃபிஷியல் இன்டெலிஜென்ஸ்) செயற்கை அறிவுத் துறை, மார்வின் மின்ஸ்கி என்பவரால் அறுபதுகளில் தொடங்கப்பட்டது. கம்ப்யூட்டர்களுக்கு எப்படி அறிவு தருவது, புத்திசாலித்தனம் ஊட்டுவது என்பதை அவர்கள் முதலில் ஆராய்ந்தபோது ஆரம்ப சாத்தியங்கள் உற்சாகமளித்தன. மின்ஸ்கி 'இன்னும் முப்பது ஆண்டுகளில் கம்ப்யூட்டர்கள் மனிதர்களைச் செல்லப் பிராணிகளாக வளர்க்கும் காலம் வந்து விடும்' என்றார்.

ரொம்பத் தப்பு! அவர் இதைச் சொல்லி ஐம்பது ஆண்டுகளாகியும் கம்ப்யூட்டருக்கு ஓர் எறும்பின் அறிவைக்கூட கொடுக்கும் நிலைக்கு நாம் வரவில்லை. காரணம் புத்திசாலித்தனம் என்பது உயிர் வாழ்தல் சார்ந்தது. கோடிக் கணக்கான ஆண்டுகளுக்குப் பின் மெல்ல மெல்லச் சேர்ந்த ஒரு சங்கதி அது. அதை ஐம்பது ஆண்டுகளில் ஒரு மெஷினுக்குப் புகட்ட முடியும் என்று எண்ணியதே மமதை.

ஒரு எறும்பை எடுத்துக் கொள்வோம். எத்தனை உன்னதமான ஜீவன் அது. அதன் ஆண்டனாவில் காற்றை உணரும் சக்தி உள்ளது. உணர்ந்து, உணவு எந்தத் திசையில் இருக்கிறது என்று அறியும் சக்தி இருக்கிறது. சக எறும்பைத் தொட்டுப் பார்த்து, முகர்ந்து பார்த்து உணவை நோக்கிச் செல்லும் திறமை உள்ளது. அதோடு பத்தாயிரம் கூட்டாளி எறும்புகள் சேர்ந்து கொண்டு ஒரு புற்றைக் கட்டும் அறிவும், மொத்தமாக எறும்பின் சமூகத்தில் காலனியின் அறிவாகவுள்ள ராணியைக் காப்பாற்றுவது, குழந்தைகளைப் பராமரிப்பது,



எதிரிகளைக் கடித்துத் துரத்துவது இது அத்தனையும் நாம் ஒரு ரோபோவினுள் கொண்டு வர முடியுமா? முடியுமென்றால் நாம் போன கட்டுரையில் சொன்ன டாப் - டவுன் அணுகு

முறையால் இயலாது. பாட்டம்-அப்-கீழிருந்து மேலே செல்லும் முறைதான் பயன்படும்.

ஓர் எறும்பின் செல் உயிரணுவை நம்மால் ரசாயன முறைப்படி அமைக்க முடிந்தால், அந்த செல் இரட்டிப்பாகும்போது அதில் பொதிந்துள்ள டி.என்.ஏ. செய்திகள் மூலம் தக்க சமயத்தில் எறும்பின் மற்ற பாகங்களாகப் பரிணமிக்கும். இந்த முறையை எளிதாக்கி மாலிக்யுல் என்னும் கூட்டணுவிலேயே அதன் இறுதி செயல் வடிவத்துக்கான செய்திகளை அமைக்கும் ரசாயன மோட்டார்களைத்தான் ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். மாலிக்யுலர் மோட்டார்கள் என்கிறார்கள். ரைஸ்மில், மின்விசிறி, விவசாய மோட்டார்கள், ஆர்மேச்சர் ரோடார் ஸ்டேட்டார் என்ற பாகங்கள் கொண்டவை. இவை செய்வதெல்லாம் என்ன? நகரும், நகர்த்தும்

• மார்வின் மின்ஸ்கி



# சாகஸம் ஆயிரம் - 6

## நானோ டெக்னாலஜியின் முதல் மைல் கல்லை அடைந்துவிட்டோம்

விட பல நுட்பமான காரியங்களைச் செய்கிறது. சுருங்கச் சொன்னால் குழப்பத்திலிருந்து தெளிவைத் தேர்ந்தெடுக்கின்றது என்று சொல்லலாம். இது எப்படி நிகழ்கிறது என்று சமீபத்தில் புரிந்து கொள்ளத் துவங்கியிருக்கிறார்கள். இதை ப்ரவுனியன் ராட்செட் Brownian ratchet சித்தாந்தம் என்கிறார்கள். குழப்பத்திலிருந்து தெளிவை வடிகட்டும் முறை. இதை செய்தித் தொடர்பில் சாமர்த்தியமாகப் பயன்படுத்துகிறார்கள். வேதியியல் முறைகளைப் பயன்படுத்தி கடுகை விடச் சிறிய 'மோட்டார்'கள் செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த மோட்டார்களில் சுழற்சி எதும் கிடையாது. ரசாயன சக்தியை நகரும் சக்தியாக மாற்றுவதுதான் இதன் ஆதார தத்துவம். சேதமில்லாமல் அப்படியே மாற்றுவது. உயிரணுக்கள் செய்வது போல் உயிரற்ற மாலிக்யுல்கள் தம்மைத்தாமே

சக்தி. ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு எதையாவது நகர்த்துவது... காற்றை, நீரை, சக்கரத்தை. ஓர் உயிரணுவும் மோட்டாரே. ரோடார் ஸ்டேட்டார் ஏதுமில்லாமல் அது நகர்த்துகிறது. ப்ரோட்டீன்களைத் தயாரிக்கிறது. தன்னைத்தானே இரட்டிப்பாக்குகிறது.

ஒரு மோட்டாரை



சுஜாதா

பூட்டிக்கொள்ளவும் கூட்டிக்கொள்ளவும் வகை பிரிக்கவும் தரம் பிரிக்கவும் இதுபோன்ற செயல்களைச் செய்யத் துவங்கியிருக்கிறார்கள். இதுதான் நானோ டெக்னாலஜியின் முதல் மைல் கல். இறுதியில் ஒரு எறும்பு போல தன்னைத் தானே உருவாக்கிக் கொண்டு செயல்படும் அணுக்கூட்டத்தை வடி

செட்டிநாட்டு அரச குடும்பத்தின் மருமகள், மு.அ.மு.இராமசாமி எம்.பி.யின் துணைவியார் சிகப்பி ஆச்சி. அவரிடம் பணியாற்றி வந்த ஊழியர் ஒருவர், தேசிய வங்கி ஒன்றின் கிளை மேலாளராகப் பதவி உயர்வு பெற்ற தமது நண்பரை அரண்மனைக்கு அழைத்து வந்தார். 'ஆச்சி, இவரது வங்கிக் கிளைக்கு டெபாசிட் ஏதாவது கொடுத்தால் உதவியாக இருக்கும். இவர் பதவியேற்றுக் கொண்டிருக்கும்



# கோடி கொடுத்த குணவதி!

இந்த நிதியாண்டில் எதிர்பார்த்த அளவு டெபாசிட்டுகளைத் திரட்ட முடியவில்லை' என்று உதவி கேட்டிருக்கிறார். அதற்கு ஆச்சி, 'உங்களுக்கு எவ்வளவு டெபாசிட் தேவைப்படுகிறது?' என்று கேட்க, 'உங்களால் முடிந்த அளவு செய்யுங்கள்' என்று கூறியிருக்கிறார் வங்கி மேலாளர். இரண்டு நாட்கள் கடந்தன. அரச குடும்பத்தின் வங்கிக் கணக்கு உள்ள மற்றொரு வங்கியிலிருந்து, நண்பரின் கிளைக்கு ஒரு கோடியே ஒரு லட்சத்துக்கான காசோலை வந்திருக்கிறது. இதில் நம்ப முடியாத ஆச்சர்யம், டெபாசிட் டார்கெட்டை முடிக்கத் தேவைப்படும் துல்லியமான தொகை அது! அதை ஆச்சி எப்படி, யாரிடம் விசாரித்தார் என்று தெரியவில்லை. உதவி செய்வதை ஓர் அர்த்தத்தோடு செய்ய வேண்டும் என்று நினைப்பவர் சிகப்பி ஆச்சி. அவரது மறைவு ஈடுசெய்ய இயலாத ஒன்று'' என்று நம்மிடம் வருத்தத்தைப் பகிர்ந்து கொண்டார். ராஜா சர் அண்ணாமலை செட்டியார் நினைவு அறக்கட்டளையின் செயலாளர் ஆறு. ராமசாமி.

சென்னை காந்தி நகர் ராணி மெய்யம்மை உயர்நிலைப் பள்ளியின் தாளாளராக இருந்து அப்பள்ளியைக் கண் போல காத்து வந்த சிகப்பி ஆச்சி, தீவிர தெய்வ பக்தை. அதிலும் ஐயப்பன் மீது அளவு கடந்த பக்தி கொண்டவர்.

- ஸ்ரீ

வமைக்க முடியும். கொஞ்சம் மிகையாகச் சொன்னால், நாற்காலியாக தன்னை அமைத்துக் கொள்ளக்கூடிய மர அணு என்று சொல்லலாம்.

இந்த ராட்செட் என்ன சமாசாரம் என்று பார்க்கலாம். மோட்டார்களுக்குச் சக்தி கொடுத்தால் அவை சுழல ஆரம்பிக்கும். அதை நிறுத்தினால் நின்று போகும். மாலிக்யுலர் மோட்டார்களை, சக்தி கொடுத்தால் தொடர்ந்து சுழலும் சாதனங்களாக அவர்கள் பார்க்கவில்லை. சக்தி கொடுத்தால் சில அசைவுகளை மட்டும் அனுமதிக்கும் சாதனங்களாகத்தான் பார்க்கிறார்கள். ஒரு ராட்செட் சக்கரம் படிப்படியாகத்தான், அளவாகத்தான் முன்னேறும். கடிகாரத்தில் உள்ள எஸ்கேப் மெக்கானிசத்திற்கான பல்சக்கரத்தை யோசித்துப் பாருங்கள்... அது போல் மாலிக்யுலர் மோட்டார்களைக் குறிப்பிட்ட திசையில், குறிப்பிட்ட அளவு தான் சுழலக்கூடியதாக அமைக்க முடிந்தால், அதிலிருந்து எறும்பு சைஸ் ரோபோக்களை உண்டாக்க முடியுமாம்.

ப்ரவுனியன் ராட்செட் மோட்டார்களின் முதல் உபயோகம் அதிநுட்ப அளவில் உள்ள சாம்பிள்களை வகை பிரிப்பது. டி.என்.ஏ. டெஸ்ட் என்று சொல்கிறார்களே, ஒரு நபரின் பிறப்பு அடையாளங்களைக் கண்டறியும் பரிசோதனை... அதில் ஒரு சாம்பிளிலிருந்து டி.என்.ஏ. மாலிக்யுல்களைப் பிரிப்பது தொல்லையான வேலை. இதை ப்ரவுனியன் ராட்செட் வடிகட்டும் முறையில் சுலபமாக்கியிருக்கிறார்கள். நானோ டெக்னாலஜியின் முதல் உபயோகம் இது. இதனால் பல பரிசோதனைகள் துரிதப்படுத்தப்பட்டுள்ளன.

(விந்தை தொடரும்)

படம் : ஸ்ரீஹரி



# மார்ஜினுக்கு மேலே வாத்து!

கையில் பேனாவைப் பிடித்து கட்டை விரலையும் ஆட்காட்டி விரலையும் ஒன்று குவித்து, பிற விரல்களை அப்படியே மெல்ல மடக்கி, மேலே குறிப்பிட்ட இரண்டு விரல்களுக்கும் முட்டுக்கொடுக்க வேண்டும். பிறகு அப்படியே விரல்களை நகர்த்தி நகர்த்தி வெள்ளைத்தாளுக்கு அருகே கொண்டு செல்ல வேண்டும். பிறகு லாகவமாகப் பேனாவை அழுத்தினால் 'அட! எழுத முடிகிறதே!' இப்படித்தான் நிறைய ஆச்சரியக் குறிகளைப் போட்டு ஆச்சரியப்பட முடிகிறது. யார் இப்போது கையால் எழுதுகிறார்கள்? எல்லாமே லொட்டு லொட்டு தானே!

அண்மையில் 'தி ஸ்பெக்டேட்டர்' அசல் கையெழுத்தைப் பற்றி பல சுவாரஸ்யமான செய்திகளை வெளியிட்டிருக்கிறது. மைக்கேல் ஏஞ்ஜலோவின் எழுத்துகள் ஒரே நேர் வரிசையில் அப்படியே ஒரு பக்கம் சாய்ந்து பயணிக்குமாம். முதல் அத்தியாயத்திலுள்ள முதல் எழுத்தைப் பிடித்து இலேசாகத் தள்ளிவிட்டால், இறுதி அத்தியாயத்தின் இறுதி எழுத்துவரை பொலபொலவெனக் கீழே சாய்ந்துவிடும். அப்படி ஒரு ரயில்பெட்டி எழுத்து. எலிஸபெத் மகாராணிக்கு எழுதவே தெரியாதாம். படம்தான் வரைவாராம். அவர் எழுதி முடித்தவுடன் அப்படியே கண்ணாடி போட்டு மாட்டிவிடலாம் என்கிறார்கள்.

சார்லஸ் டிக்கன்ஸின் கையெழுத்துப் பிரதியை நியூயார்க்கில் பார்க்கலாம். ஆராய்ச்சியாளர் என்று சொன்னால் பக்கங்களைப் புரட்ட அனுமதிப்பார்கள். இவருடைய கையெழுத்தை பூதக்கண்ணாடி வைத்துப் பார்த்தவர்கள் வியக்கிறார்கள். 'பாருங்கள் இந்த இரண்டு பாராவையும் குஷி மூடில் எழுதியிருக்கிறார்' என்று ஒரு பத்தியைக் காட்டுகிறார்கள். எழுத்துகள் உணர்ச்சிகளை அப்படியே அப்பட்டமாகக் காட்டுகிறதாம்.

தாக்கரே (பால் தாக்கரே அல்ல) மார்ஜினுக்கு மேலே ஒரு வாத்து தொங்கிக்கொண்டிருக்கும்; பக்கம் முடியும் இடத்தில் ஒரு தவளை குதித்துக் கொண்டிருக்கும். எழுதும்போது இடையில் போரடித்தாலோ அல்லது தேவைப்படும் ஒரு வார்த்தை தலைமறைவாகிவிட்டாலோ வரையத் தொடங்கிவிடுவாராம்.

ஜேன் ஆஸ்டின் சிறுவயதில் ஸ்கேலால் நிறைய அடி வாங்கியிருக்க வாய்ப்பிருக்கிறது. நிறைய குட்டி குட்டித் தவறுகள், எழுத்துப் பிழைகள்.

இன்றைய லொட்லொட் எழுத்துகள்கூட ரயில் பெட்டிபோல் ஒரே சீராகத்தான் இருக்கின்றன. அடித்தல் திருத்தல் கிடையாது. மார்ஜினுக்கு மேலே வாத்து படம் இருக்காது. மகிழ்ச்சியாக இருந்த போது எழுதப்பட்ட வரிகளைக் கண்டு பிடிக்கவே முடியாது. எல்லோரும் ஒன்று போலவே எழுதுகிறார்கள். ஒரு ராணுவ அதிகாரியின் போர் அறிக்கையும் ஒரு கவிஞனின் காதல் கவிதையும் ஒன்று போலவே காட்சியளிக்கிறது.

- மருதன்

ஒரு பக்கம்

# "நஷ்டமடைந்துதான் சூட்சுமம் கற்றோம்!"

சென்னை திருவல்லிக்கேணி, மைலாப்பூர்வாசிகளுக்கு ஜீவா காபியும் அதன் சுவையும் பழகிப்போன ஒன்று. ஐம்பத்துநான்கு வருடங்களாக மக்களின் நம்பிக்கையைப் பெற்ற நிறுவனம். அதன் உரிமையாளர் வெங்கடேசனிடம் நாம் வைத்த முதல் கேள்வியே 'காபி விலை ஏன் எட்டிப் பிடிக்க முடியாத உயரத்துக்குச் சென்றுவிட்டது' என்பதுதான். தமது தொழில் குறித்து விரிவாகவே பேசினார் வெங்கடேசன்...

"கடந்த நூறு வருடங்களாக தமிழர்கள் தங்களுடைய வீடு தேடி வருபவர்களை வாயார 'காபி சாப்பிடுறீங்களா?' என்று உபசரிப்பதுதான் வழக்கம். ஆனால் காபி வியாபாரம் இந்தளவுக்கு மணக்கும் விதத்தில் இல்லை. காபி என்றாலே கெடுதல் என்று இளைய தலைமுறையினரைப் பெற்றோர் தடுத்து விடுகின்றனர். அளவுக்கு மிஞ்சினால் காபி மட்டுமா, எல்லா உணவுப் பொருள்களும்தானே கெடுதி. இதனால் மட்டும் காபி வியாபாரம் பாதிக்கப்படவில்லை. பத்து ஆண்டுகளுக்கு முன்னர் காங்கிரஸ் அரசு கொண்டு வந்த ஒரு சட்டம்தான் எங்களை அதல பாதாளத்துக்குத் தள்ளிவிட்டது.



காபியின் விலையைக் கட்டுப்படுத்தவும் வியாபாரத்தை நெறிப்படுத்தவும் மைய அரசால் உருவாக்கப்பட்டதுதான் காபி போர்டு. தலைமையிடம் பெங்களூர். எந்த ஊரில் காபிக்கொட்டை பயிரிடப்பட்டாலும் அது விற்பனைக்கென்று வரும்போது காபி போர்டில் நடத்தப்படும் ஏலத்தின் வழியாகவே விற்பனைக்கு அனுப்பப்படும். உள்நாட்டுச் சரக்கு, ஏற்றுமதிச் சரக்கு என்று பிரிவு ஏற்படுத்தி, வியாபாரம் சிக்கலின்றி நடைபெற்றது. ஆனால், காங்கிரஸ் அரசு காபி போர்டைக் கலைத்தது. காபி வியாபாரத்தை முற்றிலுமாகத் திறந்துவிட்டது. கட்டுப்படுத்த யாருமின்றி விலை கிடுகிடுவென ஏறியது. நியூயார்க்கிலுள்ள 'கோக்கோ காபி எக்ஸ்சேஞ்ச்' எனும் மையத்தில்தான் இப்போது விலை நிர்ணயம் செய்யப்படுகிறது. காபிக்கொட்டை அதிக உற்பத்தி செய்யும் தேசம் ப்ரேஸில். வறுமையான நாடு. தனது உற்பத்தி முழுவதையும் அமெரிக்க டாலருக்கு விற்றுவிடுவதால் அவர்கள் சொல்படி தலையாட்டுகிறது. இதனால் ஒரு டன் எவ்வளவு விலை என்று அனுதினமும் ஒரு விலையை நிர்ணயம் செய்கிறது அமெரிக்கா. இந்தியாவிலுள்ள காபி வியாபாரிகள் ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச் போல தினமும் இன்டர்நெட்டில் பார்த்துத்தான் இன்றைக்கு என்ன ரேட் என்பதைத் தெரிந்துகொள்வோம். அங்கு விலை குறைந்தால், இங்கே விலை இறங்காது. பதுக்கல் தொடங்க ஆரம்பிக்கும். எப்போது விலை எகிறுகிறதோ அப்போது விற்பனைக்கு விடப்படும். இப்படி விழுந்ததுதான் காபி வியாபாரம்" என்று நிலைமையை விளக்கினார்.

வெங்கடேசனின் பூர்வீகம் பாலக்காடு. அங்கு நெற்பயிரிட்டு விவசாயம் செய்து வந்த இவரது குடும்பம், பின்னர் பிழைப்பு தேடி சென்னை வந்து ஆரம்பித்ததுதான் ஜீவா காபி. "ஜீவரத்னம் என்றொரு முன்னாள் நடிகைதான் திருவல்லிக்கேணியில் ஜீவா காபி கடை நடத்தி வந்தார். அவ

ரால் லாபகரமாக நடத்த முடியவில்லை. விற்பதற்காக விளம்பரம் செய்தார். என் அப்பா அதை வாங்கி, அதே பெயரில், அதே இடத்தில் கடையைத் தொடர்ந்து நடத்தினார். ஆரம்பத்தில் அப்பாவுக்கு இந்தத் தொழிலில் அரிச்சுவடிகூடத் தெரியாது. காபிக்கொட்டையைத் தேர்வு செய்வதிலிருந்து வறுப்பது வரை ஆரம்பத்தில் நிறைய தவறுகள் செய்து நட்டம் அடைந்துதான் தொழிலிலுள்ள சூட்சுமங்களையெல்லாம் கற்றுக்கொண்டார். எனக்கும் அவற்றைக் கற்றுக் கொடுத்தார்'' என்கிறார்.

''காபி உற்பத்தி எத்தியோப்பியாவில்தான் தொடங்கப்பட்டது. காபி கொட்டைச் செடியில் அரேபிகா, ரோபஸ்டர் என இருவகை உண்டு. நாம் ரசித்து ருசித்துக் குடிப்பது அரேபிகா வகை. ரோபஸ்டர் நமக்கு ஒவ்வாதது. நாக்கில் பட்டால் கசக்கும். இந்தியாவில் காபி விற்பனை என்றாலே அது தென்னிந்தியாவைத்தான் குறிக்கும். அதுவும் தமிழ்நாடு. வட இந்தியாவில் காபி பற்றிய விழிப்புணர்ச்சி மிகக் குறைவு. கர்நாடகாவினுடைய கடல் மட்டம் நான்காயிரம் அடி உயரத்துக்கு மேலிருப்பதால் அதன் விளைநிலங்கள் காபி கொட்டை உற்பத்திக்குச் சாதகமாகின்றன'' என்று காபி வரலாற்றை புட்டுப் புட்டு வைத்தவர்,

''எங்களுக்கு திருவல்லிக்கேணியைத் தவிர்த்து வேறு எங்கும் கிளைகள் கிடையாது. நாங்கள் சென்னையிலுள்ள முக்கிய ஹோட்டல்களுக்கு சப்ளை செய்கிறோம். இலவச டோர் டெலிவரியும் செய்கிறோம். அடுத்து ஒரு காபி ஷாப் திறக்கவுள்ளேன். வாயில் நுழையாத இத்தாலியன் பெயர்களில் மெனு கார்டு இருக்காது. நம் பாரம்பரிய டிகிரி காபியின் சிறப்பைச் சொல்லும் விதமாக அது அமையும்.

இந்தத் தொழிலில் தேக்கம் என்பதே வராது. இன்று மக்களின் வாழ்க்கை மேம்பட்டிருப்பதால் வியாபாரம் சிந்தாமல் சிதறாமல் இருக்கிறது. இதனால் தமிழக எல்லைக் கோட்டைத் தாண்டி ஜீவா காபியைக் கொண்டு செல்ல நினைக்கிறேன். அதற்கு முதலில் கிரெடிட் கார்டு வழியே பணம் செலுத்தும் முறை இன்னமும் சுலபமாக வேண்டும்'' என்கிறார் வெங்கடேசன்.

**- செந்தில்**



# "கடவுளின் பெயரால் சுரண்டாதீர்கள்!"

ஓர் அரசு அமைப்பின் தலைவர் என்பதையும் தாண்டி தம் ரசனைகளை வளர்த்துக் கொண்டிருக்கிறார் தேஜிந்தர்சிங் ககன். சென்னை தொலைக்காட்சி நிலையத்தின் இயக்குநர் பொறுப்பை சில மாதங்களுக்கு முன் ஏற்றிருக்கும் இவர் ஓர் எழுத்தாளரும்கூட. 'அதுவே என் முகம்' (பெஹர் மேரா செஹ்ரா) எனும் இவரது நூல் 1994-ல் மத்தியப் பிரதேச அரசின் அகாடமி விருதைப் பெற்றிருக்கிறது. அவரைச் சந்தித்தபோது வேறு சில சுவாரஸ்யங்களும் காத்திருந்தன.

முதலில் சட்டீஸ்கரில் உள்ள ஒரு பத்திரிகையில் நிருபராகத்தான் இவர் தம் வாழ்க்கையைத் தொடங்கி இருக்கிறார். மிகவும் சிறு வயதில் மார்க்ஸிய கொள்கைகளால் கவரப்பட்டாராம்.

தொலைக்காட்சிப் பணியில் நிரந்தரமாக ஓரிடத்தில் இல்லாமல் அங்கங்கே மாற்றலாவது பிடித்திருக்கிறதா என்றால், "ஓர் எழுத்தாளர் எனும் கோணத்தில் இது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. பலதரப்பட்ட மக்களை, பல்வேறு கலாசார பின்னணியில் பார்ப்பது என் அனுபவத்தை செழுமைப்படுத்துகிறது" என்கிறார்.

தமது படைப்புகளுக்கு இவர் கருவாகவும் களனாகவும் தேர்ந்தெடுப்பது எவற்றை?

"பெரும்பாலும் கீழ் மற்றும் மத்தியதர மக்களின் வாழ்க்கை முறையையும், அவர்கள் சுரண்டப்படுவதையும்தான் என் களனாக எடுத்துக் கொள்கிறேன். அதுவும் கடவுளின் பெயரால் இந்தச் சுரண்டல் நடப்பதைக் கண்டு கொதித்துப் போய் எனக்குக் கடவுள் நம்பிக்கையே போய்விட்டது. பழங்குடி மக்கள் ஏமாற்றப்படுவதைப் பலமுறை பார்த்துப் பார்த்து கொதித்துப் போனதுண்டு."

பழங்குடி மக்களுக்கு நடுவே இவர் வளர வேண்டிய சூழல் என்ன? "என் குடும்பம் இந்தியா-பாகிஸ்தான் பிரிவினையின்போது இந்தியாவுக்கு வந்து சேர்ந்தது. அப்பா சென்ட்ரல் எக்ஸைஸில் குமாஸ்தாவாக வேலை செய்தார். பிறகு அந்த வேலை பிடிக்காமல் போகவே, காடுகளில் வியாபாரம் செய்யும் பணியில் ஈடுபட்டார். இந்தச் சூழலில் பஸ்தர் எனும் பழங்குடி மாவட்டத்தில் நான் வளர்ந்தேன். அங்குள்ள பழங்குடி மக்கள் காசு என்பதையே பயன்படுத்த மாட்டார்கள். எல்லாமே



• தேஜிந்தர்சிங்

பண்டமாற்றுதான். அதை அரசு அதிகாரிகள் புத்திசாலித்தனமாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். பழங்குடி மக்கள் தங்கள் பாதுகாப்புக்காக இரும்பினாலான அம்புகளைப் பயன்படுத்துவதுண்டு. இதற்குத் தேவைப்படும் சாதாரண இரும்புத் துண்டைக் கொடுத்து விட்டு அதற்குப் பதிலாக ஒரு தேக்குமரத்தை வெட்டி எடுத்துச் செல்வார்கள் அரசு அதிகாரிகள். இதெல்லாம் என் மனதைப் பாதித்தது. நான் இதுவரை நான் எழுதியுள்ள எட்டு நாவல்களிலும் தலித் பெண்மணி, பழங்குடி இளைஞன் இப்படிப்பட்ட பாத்திரங்கள்தான் முக்கியப் பங்கு வகிக்கின்றன."

தூர்தர்ஷனுக்காக தேர்தல் கவரேஜ் செல்வது இவருக்கு மிகவும் பிடித்திருக்கிறது. "மக்கள் கருத்து என்பதால் பலவிதமான கருத்துகளைத் தடையின்றி அப்போது ஒளிபரப்ப முடிகிறது" என்கிறார்.

தமிழ்நாட்டுக்கு வந்து ஒரு நாவல் ரெடியாகிவிட்டதாம், 'அங்கிள் சித்து இன் சென்னை' என்கிற தலைப்பில். 'புதினங்களை எழுதும்போது, அரசு ஊழியராகவும் இருக்கிறோமே என்ற எண்ணம், சில கருத்து ஓட்டங்களை வெளிப்படுத்த முடியாமல் தடுத்ததுண்டா?' என்றால்,

"கிடையாது. மத்தியப் பகுதியில் வாழும் மலைவாழ் மக்களில் கிறிஸ்தவ மதத்துக்கு மாறியவர்களின் மூன்றாவது தலைமுறையினரைப் பற்றி நான் 'காலா பாதிரி' என்று ஒரு புதினம் எழுதினேன். இதில் எழுதிய கருத்தை ஒரு கட்டுரையாக வடித்திருந்தால் என் பதவி தொடர்பாகச் சில சிக்கல்கள் நேர்ந்திருக்கலாம். ஆனால் க்ரியேட்டிவ் எழுத்துகளுக்கு அரசியலமைப்புச் சட்டம் முழு அனுமதி அளிக்கிறதே" என்கிறார்.

- ஜி.எஸ்.எஸ்.

படம் : ஸ்ரீஹரி



• மாயாவியின் கோட்டை... பிரமாண்ட செட்!

# அப்படிப் போடு!

இதுவரை சினிமாவில் மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்த '3D' தொழில்நுட்பத்தை தொலைக்காட்சிக்கு இறக்குமதி செய்து, ஆசியாவிலேயே முதல் 3D டி.வி. தொடரை ஒளிபரப்பப்போகும் முதல் தனியார் தொலைக்காட்சி என்ற பெயரைத் தட்டிச் சென்றிருக்கிறது ஜெயா டி.வி. இத்தொடரைத் தயாரிப்பவர்கள் ஜி.வி. ஃபிலிம்ஸ் நிறுவனம். அமெரிக்காவிலிருந்து 'அனகிளிப்' (Anaglyph) என்ற தொழில்நுட்பத்தை இதற்கென்றே இறக்குமதி செய்து இருபத்தைந்து எபிசோட்களை சுடச்சுட சுட்டுத் தள்ளிவிட்டார்கள். ஜூன் இரண்டாவது வாரம் ஒளிபரப்பைத் தொடங்க இருக்கும் மாயாவி தொடரை விஷேச 3D கண்ணாடிகள் மூலமே பார்க்க முடியும். இதற்கென்று கேபிள் ஆபரேட்டர்கள் மூலமாக ஐம்பது லட்சம் கண்ணாடிகளை விநியோகிக்க ஆரம்பித்துவிட்டது ஜெயா டி.வி. வட்டாரம். நீ, நான் என்று ஸ்பான்ஸர்கள் மத்தியில் கடுமையான போட்டி ஒருபுறமிருக்க... தொடரின் விளம்பர இடைவேளையில் 3Dயில் தயாரிக்கப்பட்ட விளம்பரங்களின் அணிவகுப்பும் கலக்கப் போகிறதாம்... அப்படிப் போடு!

- ஸ்ரீ

# இது புதுசு! வளம் தரும்

**ம**துரன், விதனன் இருவரும் பால்ய சிநேகிதர்கள். குருகுலத்தில் இணைந்து படித்த இருவருமே நன்றாகப் படிக்கக் கூடியவர்கள். குருவின் மதிப்புக்குப் பாத்திரமானவர்கள். இவர்கள் இருவருக்குமே தாங்கள் பெரியவர்களானதும் தனித்தனியே ஆசிரமம் அமைத்து, தாங்கள் கற்ற கலைகளை மற்றவர்களுக்குச் சொல்லித்தர வேண்டும் என்பது ஆசை. குருகுலவாசம் முடிந்தது. இருவரும் ஒரே மாதிரியான அளவில் தேர்ச்சி பெற்று தனித்தனியே ஆசிரமம் அமைத்தனர். இருவருடைய ஆசிரமத்திலும் மாணவர்கள் வந்து பாடம் பயிலத் தொடங்கினர்.

நாட்கள் செல்லச் செல்ல, மதுரனின் ஆசிரமம் மென்மேலும் வளர்ச்சி பெற்றது. ஆனால் விதனனின் ஆசிரமமோ அதற்கு நேர்மாறாக இருந்தது. நாளுக்கு நாள் மாணவர்களின் எண்ணிக்கை குறையத் தொடங்கியது. விதனனுக்குக் கவலை அதிகரித்தது.

ஒருநாள் அருகில் இருக்கும் தமது நண்பனின் ஆசிரமத்துக்குச் சென்று பார்க்கிறார் விதனன். அப்போது தமது மனக்கவலையைக் கூற, மதுரனுக்கு மிகவும் வருத்தமாகி விட்டது. 'நம் இருவருக்குமே ஒரே மாதிரியான பாடங்களைத்தானே குரு சொல்லிக் கொடுத்தார்... இருவரும் ஒரே மாதிரிதானே படித்தோம். ஏன் உன் ஆசிரமம் நன்றாக இல்லை' என்று யோசித்த மதுரன், விதனனை அழைத்துக்கொண்டு அவருடைய ஆசிரமத்துக்குச் சென்று சுற்றும் முற்றும் பார்த்தார்.

உடனேயே மதுரனுக்குப் புரிந்துவிட்டது... அந்த ஆசிரமம் பூமி சாஸ்திரப்படி அமையவில்லை என்பது. இதைத் தம் நண்பனிடம் எடுத்துச்சொல்லி, சில மாற்றங்களைச் செய்கிறார்.

அந்தச் சின்னச் சின்ன மாற்றங்களுக்குப் பிறகு விதனனின் ஆசிரமத்தில் மாற்றங்கள் வரத் தொடங்கின. மாணவர்கள் பழையபடி அதிக அளவில் வந்து சேரத் தொடங்கினர். மாணவர்களின் கல்வித்தரமும் உயர்ந்தது. மகிழ்ச்சி பூத்தது. நண்பர்கள் விரும்பியபடி, இருவருடைய ஆசிரமங்களும் இணைந்து கல்விப் பணியை மிகச் சிறப்பாகச் செய்தன.

கீழ்நோக்கிப் போய்க்கொண்டிருந்த விதனனின் ஆசிரமத்தில் இந்த அதிரடி மாற்றத்துக்கு என்ன காரணம்? எப்படி இந்த அளவுக்கு முன்னேற முடிந்தது? இத்தனை கேள்விகளுக்கும் ஒரே பதில் வாஸ்து சாஸ்திரம்.

**பு**ராண காலத்தில் இருந்து இன்றைய ஃபாஸ்ட் ஃபுட் காலம் வரை வாஸ்து என்கிற வஸ்துவுக்கு மக்கள் ஆதரவு மெல்ல மெல்ல வளர்ந்துகொண்டே வருகிறது. இப்படி இந்த வாஸ்துவுக்கு ஆதரவு பெருகிக் கொண்டே வருவதற்கு என்ன காரணம்... வாஸ்து எப்படி உருவானது... வாஸ்துவின் வரலாறு என்ன... வாஸ்துவால் வரும் பலன்கள் என்ன... வாஸ்து குறைபாட்டால் ஏற்படும் சங்கடங்கள் என்ன... அவற்றை எப்படி நிவர்த்தி செய்து கொள்வது... இப்படி வாஸ்து தொடர்பான அனைத்து விஷயங்களையும் உங்களுடன் இந்தப் பகுதியில் பகிர்ந்து கொள்ளவிருக்கிறேன்.

இன்றைக்கு வாஸ்துவுக்கு எந்த அளவுக்கு வரவேற்பு இருக்கிறதோ அதற்

காஞ்சி கிருஷ்ணா

# வாஸ்து!



குச் சற்றும் குறையாத வண்ணம் விமர்சனக் கருத்துகளும் வந்தவண்ணம் உள்ளன. குறிப்பாக நகைச்சுவை நடிகர்களுக்கு வாஸ்து என்றால் குஷியாகிவிடுகிறது. சகட்டுமேனிக்கு வாஸ்துவைக் கேலி செய்து காமெடி டிராக் செய்து விடுகிறார்கள். ரசிகர்களும் அதை ரசிக்கின்றனர். அதற்காக ரசிப்பது தவறு என்று சொல்லவில்லை. எதையும் நகைச்சுவையாகச் சொன்னால் ரசிப்பது இயற்கைதான். ஆனால் வாஸ்துவை மேம்போக்காகப் பார்த்துவிட்டு அதை வெறும் கேலிப்பொருளாகச் சித்திரிப்பதை ஏற்றுக்கொள்ள முடியாது.

வாஸ்துவைப் பற்றி ஆதிஅந்தமே தெரியாமல் அதைக் கேலி செய்யக்கூடாது. பாரதியார் தமிழ் மொழியை இனிதான மொழி என்று வெறுமனே சொல்லிவிடவில்லை. பல மொழிகளையும் பயின்ற பின்னரே கூறினார். ஆகவே வாஸ்துவைப் பற்றி முதலில் நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

**வா**ஸ்து உருவான கதை உங்களுக்குத் தெரியுமா? வாஸ்து என்பவர் சிவபெருமானால் உருவாக்கப்பட்டவர். அதன் காரணமாக வாஸ்துவுக்கு அசுர சக்தி இருந்திருக்கிறது. இன்னமும் இருக்கிறது. குழந்தையாக இருக்கும்போதே தமது அசாதாரண பலத்தைப் பயன்படுத்தி அதிக அளவில் சேட்டை செய்யக்கூடியவராக இருந்தார் வாஸ்து. வம்பு வழக்கில் ஈடுபடுவது என்றால் வாஸ்துவுக்கு ஏக பிரியம்.

ஒருகட்டத்தில் தேவர்களையும், ரிஷிகளையும்கூட சண்டைக்கு இழுக்க ஆரம்பித்துவிட்டார் வாஸ்து. அவரது தொல்லைகள் நாளுக்கு நாள் அதிகரித்தன. ஒருகட்டத்தில் கோபத்தின் உச்சத்திற்குச் சென்ற தேவர்களும், ரிஷிகளும் நேரே சிவபெருமானிடம் சென்று முறையிட்டனர்.

எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்ட சிவபெருமான், 'வாஸ்துவின் பிறப்பே அப்படித்தான். அவனது சக்தியை அழிப்பது என்பது சாத்தியமற்றது. வேண்டுமானால் அவனை என்னிடம் இருக்கும் சக்தி ஆயுதத்தால் தாக்கி, மூர்ச்சையாகிடச் செய்கின்

* படம் : ஸ்ரீஹரி

# கேளுங்கள் சொல்கிறேன்!

**நா**ன் இருப்பது பத்துமாடிக் கட்டடத்தின் ஆறாவது தளத்தில்... என் வீட்டுக்கு மட்டும் தனியாக வாஸ்து பார்க்க முடியுமா... அல்லது தரைத் தளத்துக்கு மட்டும்தான் வாஸ்து பொருந்துமா...?

- ஆர். அனிதா, வேலப்பன்சாவடி

நிச்சயமாக உங்கள் வீட்டுக்கு மட்டும் தனியாக வாஸ்து பார்க்க முடியும். கவலையே வேண்டாம். பூமியை ஆதாரமாகக் கொண்டதாகவே உங்கள் பத்துமாடிக் குடியிருப்பு உள்ளது. ஆகவே மொட்டைமாடிக்குக்கூட வாஸ்து உண்டு.

**வீ**ட்டில் பாத்ரூம், டாய்லெட் எங்கு வைப்பது என்று கேட்டால் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரி சொல்லிக் குழப்புகிறார்களே...

- எம். அசோக், சென்னை.

இதில் குழம்புவதற்கே அவசியமில்லை. எளிதாகச் சொல்வதென்றால் பூஜை அறை இருக்க வேண்டிய ஈசான்ய மூலையில் பாத்ரூம், டாய்லெட் வந்துவிடக் கூடாது.

(வாசகர்களே, வாஸ்து தொடர்பாக உங்களுக்கு எழும் சந்தேகங்களைக் 'கேளுங்கள் சொல்கிறேன்', கல்கி, 47 NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32 என்ற முகவரிக்கு எழுதியனுப்பி பதில் பெறலாம். கேள்விகளை தபால் அட்டையில் மட்டுமே எழுதியனுப்பவும். ஒரு அட்டையில், ஒரு கேள்வி மட்டுமே எழுதவும். பதில்கள் கல்கி இதழில் பிரசுரமாகும்.)

றேன். அதன்பிறகு அவனால் யாருக்கும் தொல்லைகள் இருக்காது' என்று கூற ஓரளவுக்குச் சமாதானமடைந்து தேவர்களும் ரிஷிகளும் விடைபெறுகின்றனர்.

சிவபெருமானும் அவர்களிடம் சொன்னபடியே வாஸ்துவைத் தம் சக்தி ஆயுதத்தால் தாக்கி மூர்ச்சையாக்குகிறார். மயக்கமடைந்த வாஸ்து பூமியில் விழுகிறார். கீழே விழுந்த வாஸ்துவின் தலை வடகிழக்கிலும், கால்கள் தென்கிழக்கிலும், ஒருகை வடமேற்கிலும், இன்னொரு கை தென்மேற்கிலும் இருக்கிறது. உடனடியாக இந்திரன், அக்னி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசான்யன் ஆகிய எட்டுப் பேரும் வாஸ்துவை எட்டுத் திக்கிலும் அமர்ந்து அழுத்திக் கொள்கின்றனர். இல்லாவிட்டால் வாஸ்து மயக்கம் கலைந்து மீண்டும் சேட்டைகளில் ஈடுபட ஆரம்பித்துவிடுவார். அவ்வாறு நடக்காமல் பார்த்துக்கொள்ளும் இவர்களுக்கு அஷ்டதிக் பாலகர்கள் என்று பெயர்.

பூமியில் வாஸ்து விழுந்து விட்டதாலும், அவரைப் பிடித்துக்கொள்ள அஷ்டதிக் பாலகர்களும் பூமியிலேயே இருப்பதாலும் பூமியில் கட்டடம் கட்டும்பொழுது அந்த அஷ்டதிக் பாலகர்களுக்கு இடையூறாக எதுவும் அமைந்து விடாமல் கட்டடம் கட்டப்பட வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடுதான் வாஸ்து சாஸ்திரம். ஒரு கட்டடத்தில் இந்த இடம் இங்கு இருந்தால் நல்லது; அங்கு இருந்தால் தீயது என்று வரையறுக்கப்பட்டுள்ளது அல்லவா... அதுவும் வாஸ்து சாஸ்திரமே.

வாஸ்து சாஸ்திரம் என்பது பூமியின் மீது கட்டப்படும் அனைத்து கட்டடங்களுக்கும் மட்டும்தான் என்று கிடையாது. கட்டடம் அல்லாத தோட்டம், விவசாய நிலம் என்று எல்லாவற்றுக்கும் வாஸ்து சாஸ்திரம் உண்டு. அவற்றைப் பற்றி நாம் பின்னர் விரிவாகத் தெரிந்துகொள்ளலாம். அதற்கு முன் வாஸ்துவின் இரு பிரிவுகளைப் பற்றித் தெரிந்துகொள்வோம்.

(பார்க்கலாம்)



# பதிலுக்கு பதில்!

ரயில் ஓடிக்கொண்டிருந்தது. என் எதிரே ஒரு வயதான பெண்மணியும், சிறுவனும் அமர்ந்திருந்தனர்.

அந்தப் பெண்மணி ஒரு பிஸ்கட் பாக்கெட்டைப் பிரித்து, அந்தச் சிறுவனிடம் நீட்ட, அவன் வாங்க மறுத்தான். அவளோ கொஞ்சம் அதட்டி, பிறகு அடிக்கக் கை ஓங்க, நான் நடுவில் பேச வேண்டியதாயிற்று.

"ஏம்மா, ஏன் அடிக்கறீங்க...? அவனுக்குப் பிடிக்கலையோ.. என்னவோ?"

"அட போங்க சார். ரயில் கெளம்புற அவசரத்துல இந்த பிஸ்கெட் வாங்கினேன். டேஸ்ட் பிடிக்கலேன்னா எப்படி? அடுத்த ஸ்டேஷன்ல வேற வாங்கலாம்னா, அதுவரைக்கும் பட்டினி யாவா கெடக்கறது?" அவன் சொல்ல, நான் என் சூட்கேஸிலிருந்து நல்ல கம்பெனி பிஸ்கெட் பாக்கெட்டை எடுத்து நீட்டினேன்.

**'எனக்கு அவமானமாக இருந்தது!'**

"மன்னிச்சுக்குங்க சார். ட்ரெயின்ல முன்ன பின்ன தெரியாதவங்ககிட்ட பிஸ்கெட் வாங்கிச் சாப்பிடறது சரியில்லங்க. அதுவும் சும்மா வாங்கறது..."

அவள் தயங்க, எனக்குக் கொஞ்சம் அவமானமாக இருந்தாலும், அந்தச் சிறுவனுக்காக மீண்டும் வலியுறுத்தினேன்.

"அட என்னம்மா நீங்க? வேணும்னா என் விசிட்டிங் கார்டைத் தர்றேன். என்னைப் பாத்தா ஏமாத்தற ஆள் மாதிரியா தெரியுது? சரி. நீங்க சும்மா வாங்க வேண்டாம். உங்க பிஸ்கெட்ட கொடுங்க. அதுக்குப் பதிலா இத வாங்கிக்குங்க."

இப்போது அவள் சம்மதித்தாள். நான் கொடுத்த பிஸ்கட்டை அந்தப் பையன் சாப்பிட்டான். பிறகு நானும்... மெல்ல நான் சாப்பிடச் சாப்பிட கொஞ்ச நேரத்தில் என் நினைவுகள் மங்கிக்கொண்டே வருவது மட்டும் புரிந்தது. ●

சீனிவாசன்

எட்டாம் பாகம் 15

விடாமல் வைச்வதேவம் பண்ணி வந்த ஒருத்தரைப் பற்றிய கதை இருக்கிறது.

ஒரு கிருஹத்தில் ஒரு அப்பா. அவர் நித்யம் புரோடாசத்தை (அக்னியில் சேர்க்க வேண்டிய ஆஹுதி பண்டம்) எடுத்து வைத்துவிட்டு, கண்ணை மூடிக் கொண்டு மந்திரத்தை ரொம்ப பக்தியோடு சொல்லுவார். ஒருநாள் கண்ணைத் திறந்து பார்க்கிறபோது, ஒரு பூனை வந்து அதை எடுத்துக்கொண்டு போய்விட்டது!

உடனே ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க ஆரம்பித்தார் அவர். பூனை சரியாக, சொல்லி வைத்த மாதிரி அந்த புரோடாசத்தை அக்னியில் சேர்க்கிற சமயத்தில்தான் தினமும் வரும். அந்த வாசனை அதற்கு நன்றாகப் பழகிவிட்டது. மத்தியானம் பன்னிரண்டு மணிக்குச் சரியாக வந்துவிடும்! தினமும் புரோடாசத்தை எடுக்க முயற்சி பண்ணும்.

சாஸ்திரம் அறிந்தவர்கள் அழகாகப் பேசி வைத்திருக்கிறார்கள்:

பசு இருக்கிற இடம்கூட பூனைக்குத் தெரியாது. பசுவுக்கு அது ஒருநாள் கூட புல் வைக்கோல் போட்டதில்லை. ஆனால் பூனை பால் குடிக்காத நாளே கிடையாது! அது நித்யம் பாலைக் குடித்துக் கொண்டிருக்கிறது! ஏன்...? க்ரிஷி முயற்சி! இந்த வீடு... இந்த வீட்டிலேயிருந்து அந்த வீடு என்று அது போய்க்கொண்டேயிருக்கும் பாருங்கள்... அதற்கு எங்கேனும் ஓரிடத்திலே பால் கிடைத்துவிடுகிறது. தன் முயற்சியினாலே தினமும் பாலைக் கண்டுபிடித்துக் குடிக்கிற பூனை என்றைக்காவது ஒருநாள் பசுவைப் பார்த்திருக்குமா? பசுவுக்கு ஒரு கை புல்லைப் பிடுங்கிப் போட்டிருக்குமா? ஆனால் தேடி முயற்சிப்பதால் அதற்குக் கிடைத்து விடுகிறது!

அந்த மாதிரிதான் இந்த வீட்டில் பூனையானது தினமும் புரோடாசத்தைச் சேர்க்கிற நேரத்தில் சரியாக வந்து சேர்ந்துவிடும். இவர் என்ன பண்ணினார். மறுநாளிலிருந்து கையிலே தடியை வைத்துக்கொண்டு, பூனை வருகிறபோதெல்லாம் அதை வாசல் வரை துரத்திச் சென்று வெளியே அனுப்பிவிட்டு வருவார். திரும்பி வந்து ஹோமத்தைத் தொடர்வார்.

இப்படி ஹோமம் பண்ணிக்கொண்டிருந்தவர் ஒருநாள் புறப்பட்டுப் போய்விட்டார்! அவருடைய பிள்ளை வைச்வதேவம் முதலான கர்மாக்களைப் பண்ண வேண்டிய கட்டம் வந்தது. அவனும் அதையெல்லாம் செய்தான். ஒருநாள், இந்தப் பிள்ளையின் கிருஹத்துக்கு ஓர் அதிதியும் வந்தார். இவன் - இந்தப் பிள்ளை - என்ன பண்ணினான் என்றால், சரியாகப் பன்னிரண்டு மணிக்குத் தினமும் பூனை வருகிறதே என்று, அப்பாவைப் போலவே தடியை எடுத்துக்கொண்டு போய் பூனையை வாசல் வரைக்கும் துரத்திக்கொண்டு போய் விட்டுவிட்டு அப்புறம் உள்ளே வந்தான். அப்புறம் அந்த அதிதியைச் "சாப்பிடலாம் வாருங்கள்" என்று அழைத்தான்.

வந்தவர் கேட்டார், "ஏன்பா, பூனை சாதுவான பிராணிதானே... அதை ஏன் தெருவரைக்கும் ஓட்டுகிறாய்?" என்று!

அதற்கு அவன் சொல்கிறான்:

"எங்கப்பா ரொம்ப சாது. ஆனால் அவர் இப்படித்தான் தினமும் மத்தியானம் பன்னிரண்டு மணிக்குப் பூனையை ஓட்டுவார். அப்பா செய்ததை நானும் விடாமல் செய்ய வேண்டுமல்லவா? அதைத்தான் பண்ணுகிறேன்" என்கிறான்!

அப்பா எதற்குப் பூனையை ஓட்டினார்...? வைச்வதேவத்துக்குத் தடையாய் இருக்கிறது என்று ஓட்டினார்.

அப்பா பண்ணிய வைச்வதேவத்தை பிள்ளை விட்டு விட்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

டான்; பூனையை ஓட்டுகிற காரியத்தை மட்டும் பண்ணுகிறான்! அது பொருந்துமா? இதை - இந்தக் கதையை - வேடிக்கையாக ஆசார்யர்கள் சொல்லுவார்கள்!

வைச்வதேவம் என்கிற கர்மாவை நித்யம் சந்தியாவந்தனம் பண்ணுகிற மாதிரி பண்ணவேண்டும். அதைப் பண்ணிவிட்டு வாசலில் போய் நிற்க வேண்டும். ஒரு பசுவைக் கறப்பதற்கு எத்தனை நாழி ஆகுமோ, அத்தனை நேரம் நிற்க வேண்டும். அத்தனை நேரத்துக்குள் அதிதிகள் யாராவது வருகிறார்களா என்று பார்க்க வேண்டும். அப்படி யாரேனும் வந்தார்களென்றால் அவர்களுக்கு அன்னமிட்ட பிற்பாடுதான் சாப்பிட வேண்டும் என்கிறது சாஸ்திரம்.

நன்றாகக் கவனிக்க வேண்டும் இங்கே. ஒரு மணி நேரமோ, இரண்டு மணி நேரமோ காத்திருக்கும்படி சாஸ்திரம் சொல்லவில்லை. ஒரு பசுவைக் கறப்பதற்கு ஆகும் நாழிதான் காத்திருக்கச் சொல்கிறது!

அப்படியானால் கிருஹத்திலே பசு இருக்க வேண்டும் அல்லவா! அதைக் கறப்பதற்கு ஆகும் நேரம் எவ்வளவு என்றும் தெரிந்திருக்க வேண்டும். ஆகவே, இதன் மூலம், கோ சம்ரக்ஷணம் பண்ண வேண்டும் என்பதும் வலியுறுத்தப்படுகிறது.

அந்த மாதிரி கோ சம்ரக்ஷணம், அதிதி உபசரணம், வைச்வதேவம் எல்லாம் பண்ணிக்கொண்டு இந்த நிதாகர் வெளியிலே பவித்திரமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவரைத் தேடிக் கொண்டு ஆசார்யர் வருகிறார் ஒரு நாள். வந்தவுடனே ஆசார்யன் என்று தெரிந்துகொள்ளவில்லை இந்த நிதாகர். "அந்தர்யாமி நிவேதனம் இங்கேயே ஆக வேண்டும். (இங்கேயே உணவருந்த வேண்டும்) தாங்கள் பிரும்ம தேஜஸோடு விளங்குகிறீர்கள். உள்ளே கிருஹத்திற்கு எழுந்தருள வேண்டும்" என்று கூப்பிட்டார்.

அவரும் "வருகிறேன்" என்று சொல்லி எழுந்தருளினார். உள்ளே வந்தவுடனேயே, "இந்த வீட்டில் என்ன தளிகை? என்ன பண்ணியிருக்கிறது?" என்று கேட்டார்.

என்ன சமையல் என்று சொன்னார். சொன்னவுடனேயே, "இதெல்லாம் எனக்குப் போதாது. எனக்கு ஓஹோரைகள் (சித்ரான்னங்கள்) எல்லாம் வேண்டும்; புளியோதரை வேண்டும், பாயஸம் வேண்டும், தயிர்வடை வேண்டும், மோர்க்குழம்பு வேண்டும், பருப்பு வேண்டும், தத்யோன்னம் (தயிர் சாதம்) வேண்டும்" என்று அடுக்கினார்.

திடீரென்று ஓர் அதிதி வந்து 'அது வேண்டும் இது வேண்டும்' என்று கேட்டால் என்ன பண்ண முடியும்?

நிதாகர் ரொம்ப உணர்ந்தவர்.

## வாரியார் அமுதம்...



நாம் ஏன் பிறந்தோம்? எங்கிருந்து வந்தோம்? எங்கே போக வேண்டும்? எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்? இந்த உடம்பு எப்படி வந்தது? தானே வந்ததா? ஒருவன் தந்து வந்ததா? தந்தவன் யார்? அந்த ஒருவனை அடையும் வழி யாது? அடைந்தவர்கள் யார்? என்ற இவ்வினாக்கள் உன் உள்ளத்தில் எழுக. அவற்றை நீ உணர்க. வந்த வேலையைச் செய். வந்த வேலையை மறந்து மயங்கித் திரியாதே.

பத்னியை ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்துவிட்டார்! "ஹே ஷாலினி! என்ன ஆச்சர்யம்...? உன்னைப் போல் உத்தமி உண்டோ? இத்தனை நாட்களாக வந்த அதிதிகளுக்கு நாமே பண்ணிப் போட்டிருக்கிறோம். இன்றைக்கு வந்த அதிதி. 'அது வேண்டும் இது வேண்டும்' என்று கேட்கிறார். இப்படி உரிமையோடு கேட்கிற அதிதி எங்கும் கிடைப்பாரா? அவர் கேட்டதையெல்லாம் ஒரு நொடியிலே நீ பண்ணிவிடுவாய் என்று எனக்குத் தெரியுமே!" என்று ஸ்தோத்திரம் பண்ணினார்.

அவளும் ரொம்ப உத்தமி. அன்னியோன்னிய தாம்பத்தியம் அந்த கிருஹத்திலே. 'எந்த கிருஹத்திலே ஸ்த்ரீகள் பூஜிக்கப்படுகிறார்களோ அங்கெல்லாம் ஸ்ரேயஸ்' என்கிறது மனுஸ்ம்ருதி.

அப்படியானால் பத்னியைக் கோலமிட்ட மணையில் உட்கார வைத்து, 'ஓம் தர்ம பத்னியை நம:' என்று அர்ச்சனை பண்ண வேண்டும் என்று அர்த்தம் இல்லை. ஸ்த்ரீ தர்மம் நல்லபடியாக நடக்க ஸ்த்ரீகளை நன்றாக நடத்த வேண்டும் என்று அர்த்தம்.

நிதாகரின் மனைவி எல்லாவற்றையும் சமைத்துவிட்டு அவரைச் சாப்பிடக் கூப்பிட்டாள். உட்கார்ந்து நன்றாகச் சாப்பிடுகிறார் ருபு. நல்ல பூரணமாகப் பரிமாறுகிறாள். கடைசியில் தயிர்... கட்டி கட்டியாகத் தயிர் கொண்டு வந்து சேர்த்தாள். அவரும் பிசைந்து சாப்பிட்டார்.

இத்தனை நாழி வாயை மூடிக்கொண்டிருந்த நிதாகர் இன்னும் கொஞ்சம் நாழி வாயை மூடிக் கொண்டிருந்திருக்கலாம்... அவரைப் பார்த்துக் கேட்டார்:

"சுவாமி பசியோடு வந்தீரே... உமக்குத் திருப்தி ஏற்பட்டதா? பசி உபாதை நீங்கியதா?" என்றார்.

ருபு நன்றாக ஒரு ஏப்பத்தை விட்டுவிட்டு, தீர்த்தத்தைக் குடித்துவிட்டு, "யாரைப் பார்த்து பசி என்கிறாய்? எனக்குப் பசியுமில்லை களைப்புமில்லை..." என்றார்!

*(வளரும்)*

**மா**லத்திவைத் தாண்டி ஏழு கிலோ மீட்டரில் இருக்கிறது மரகதத் தீவு. எழில் மிகுந்த பிரதேசம். சுத்தமான ஆரோக்கிய மான சூழ்நிலை. உலகப் படத்தை விரித்து வைத்துக்கொண்டு மூன்று நாட்கள் ஆராய்ந்து சுப்ரமணியன் இந்தத் தீவைத் தேர்ந்தெடுக்கிறார். இனி அவர் இங்கு தான் வசிக்கப் போகிறார். சுப்ரமணியன் லாஸ்ட் வீக்தான் அரசுப் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். மாம்பலத்தில் இருக்கிறது அவர் வீடு. ரிட்டயரான மறுநாளிலிருந்து இந்த சென்னை மாநகர் அவருக்குப் பிடிக்காமல் போயிற்று.

காரணம் அசுத்தமான காற்று, அவ தாரமான மனிதர்கள், வாகனங்களின் ஓலம், போரடிக்கும் டீ.வி., கொசுத் தொல்லை எக்ஸெட்ரா, எக்ஸெட்...ரா..

பெரிய பெரிய பார்சல்கள் டாக்ஸி யில் அடுக்கப்பட்டன. சுப்ரமணி யன் பரபரப்பாக பூட்ஸெல்லாம் அணிந்து கொண்டார்.

"என்னங்க. உங்களைப் பிரிஞ்சு நான் எப்படிங்க" - சு.மணியின் மனைவி சரஸ்வதி விக்கி விக்கி அழுதாள்.

"சரசு, மனுஷன் வாழப்போறது ஒரு முறை. நல்ல சுகா தாரம், குடிநீர், காத்து இதையெல் லாம் அனுபவிக் காம என்ன வாழ்வு வேண்டிக் கிடக்கு? இந்த நரக சென்னையை விட்டுப் புறப்பட் டாலே போதும் போல இருக்கு. நீ எதுக்கும் கவலைப் படாதே சரஸ்வதி. மரகதத் தீவுல போய் நான் நல்லபடியா செட் டில் ஆனதும் உன்னை யும் அம்மாவையும் கூப் பிட்டுக்கறேன்" சுப்ர மணியை எல்லோரும் வழியனுப்பி வைத்தனர்.

**வி**மானப் பயணம் முடித்து மாலத் தீவில் இருந்து மரகதத் தீவுக்குப் படகுப் பயணம் செய்தார் சுப்ரமணி. மரகதத் தீவில் சுப்ரமணி காலடி எடுத்து வைத்தபோது பிற்பகல் மூன்று மணி. மூச்சை அழுத்தி உள்ளே இழுத்தார். கம கம மூலிகை மணம். வெயில் கடுகளவும் தெரியவில்லை. ஜில்லென்று காற்று. எங்கெங்கும் பச்சைப்பசேல்.

சுப்ரமணியின் உள்ளத்துக்குள் உற் சாக ஊற்று கிளம்பியது. தான் ரிட்டயர் ஆகிவிட்ட கிழம் என்பதையும் மறந்து "புதிய வானம்... புதிய பூமி..." என்று பாடிக்கொண்டே மூச்சுவாங்கியபடி ஓட



**வாசுதேவ்**

ஆரம்பித்தார். எதிரே கண்களில்பட்ட குழந்தைகளையும் இளம்பெண்களையும் கட்டிக் கட்டிப் பிடித்தார். இதுவரை அந்தத் தீவில் எம்.ஜி.ஆர். படம் யாரும் பார்த்தது இல்லை. ஆகவே சுப்ர மணியை 'பாவம் இப்படி ஆயிடுச்சே' என்பதுபோல பார்த்தனர்.

சுப்ரமணிக்கோ மரகதத்தீவு ரொம்ப மஜா தீவாக இருந்தது. இரவு ஏழு மணியளவில் ஊர் அடங்கி மௌனம் பரவியது. ஓர் உயர்ரக லாட்ஜில் சுப்ர மணி ரூம் எடுத்திருந்தார். பன்னீர் போன்ற வெந்நீரில் குளித்து முடித்து ஹாய்யாகப் படுக்கையில் சாய்ந்தார். கெட்ட சேனல் ஒன்றில் ஓடிய கிளுகிளு படம் பார்த்தார். சந்தோஷத்துடன் சுப்ரமணி.

கண் விழித்தபோது மரகதத்தீவிலேயே உசத்தியான கப்பல்லோ ஆஸ்பத்திரியில் இருந்தார். சுற்றிலும் நவீன கருவிகள். தமிழ் சினிமா மயக்க கேஸ் மாதிரி "நான் எங்கே இருக்கேன். எனக்கு என்ன ஆச்சு?" என்று கேட்டார். உயர் டாக்டர் ஒருவர் சுப்ரமணியின் மூக்கைத் தடவிக் கொடுத்து ஆறுதல்படுத்தினார். "ஒண்ணும் கவலைப்படாதீங்க. உங்க மூக்கு ஏன் தேங்காய் மாதிரி வீங்கிடுச்சுன்னு லேப்ல ஆய்வு நடந்துக்கிட்டு இருக்கு."

நம்ம ஊர் மாதிரி இல்லாமல் உடனே ஆய்வறிக்கை வந்துவிட்டது. பெரிய டாக்டர் உரக்கப் படித்தார். "இவர் பேரு சுப்ரமணி. வயசான காலத்துல திடீர்னு

# சுப்ரமணியனின் மரகதத் தீவு விசிட்!

கண்களை மூடி தூங்கிப் போனார்.

காலையில் எழுந்ததும், சந்தோஷம் எகிறிக் குதித்து ஓடிப்போய், துக்கம் மூக்கின் மேல் வந்து உட்கார்ந்தது சுப்ரமணிக்கு.

இப்படி ஒரு விபரீதம் நடக்கும் என்று அவர் எதிர்பார்க்கவே இல்லை. தினமும் காலையில் எழுந்ததும் வெங்க டேசப் பெருமாளை வேண்டியபடி உள்ளங்கை விரித்து கண்களில் ஒற்றிக் கொள்வார். அப்படிச் செய்யும்போது தான் அந்த ப்ராப்ளம் கைகளில் பட் டது. 'ஐயையோ' என்று அலறியபடி கண்ணாடி முன் போய் நின்றார்.

சுப்ரமணியனின் மூக்கு தேங்காய் அளவுக்குப் பெருத்துக் கிடந்தது. அதி லிருந்து வரும் அவர் சுவாசக் காற்று 'புஸ்... புஸ்' என்று விகார சத்தத்துடன் வெளியானது. அந்த அதிர்ச்சியைத் தாங்க முடியாமல்... அருகிலிருந்த அட்டெண்டர் பஸ்ஸரை அழுத்தி அபாய ஒலி எழுப்பி விட்டு மயக்கம் அடைந்துவிட்டார் புறப்பட்டு நம்ம தீவுக்கு வந்துட்டார். காலங்காலமா சென்னைப் புழுதியில்.. மாம்பலக் கொசுக்கடியில் வாழ்ந்து பழகி விட்டார். மரகதத்தீவின் பரிசுத்தமான சூழ்நிலையை இவரது உடல் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகவே சாக்கடையும் கொசுக்களும் நிறைந்த சென்னையில் இவர் வசிப்பதே நலம்."

சுப்ரமணியன் மரகதத்தீவிலிருந்து அனுப்பி வைக்கப்பட்டார். படகுப் பய ணம், விமானப் பயணம் முடிந்து அவர் மாம்பலத்துக்குள் நுழைந்தார். மனைவி அதிர்ச்சி அடையப் போகிறாளே என்று கவலையுடன் தன் வீட்டுக் கதவைத் தட்டினார். மனைவி அதிர்ச்சி அடைய வில்லை. "வாங்க... வாங்க" என்று வரவேற் றாள். ஏன் அதிர்ச்சி அடையவில்லை?

ஓடிப்போய் கண்ணாடி முன் நின்றார் சுப்ரமணி. தேங்காய் போல் பெருத்திருந்த அவர் மூக்கு வடிந்துபோய் பழையபடி இருந்தது. இருக்காதா? அவர்தான் துஷ்ட ஸ்தலத்துக்கு வந்துட்டாரே! ●

# "இனி நான் நம்பர் ஒன்!"



தமிழ் சினிமாவில் பிழைக்கத் தெரிந்த நடிகைகள் ஏராளம். ஆனால் நடிக்கத் தெரிந்த நடிகைகள் சொற்பம்தான். இரண்டு முறை கேரள மாநில அரசின் சிறந்த நடிகை விருது வாங்கிய நவ்யா நாயர், நடிப்புப் பிசாசாகப் பாராட்டப் படுபவர். மலையாளத்தில் மட்டுமில்லாது தமிழிலும் 'அழகிய தீயே', 'சிதம்பரத்தில் ஓர் அப்பாசாமி', 'அமிர்தம்', 'பாசக்கிளிகள்', 'ஆடும் கூத்து' என நடிக்க வாய்ப்புள்ள படங்களாகத் தேடித் தேடி நடித்து வருகிறார். அடுத்ததாக சேரனின் 'மாயக் கண்ணாடி'யில் இவரும் ஒரு பிம்பம்.

"கதை பத்தி மூச்சுவிடமாட்டேன். ஆனா இதுவரைக்கும் கண்ணீரும் கம்பலையுமா என்னைப் பார்த்தவங்களுக்குக் கொஞ்சம் ரிலீஃபா இருக்கும். கொஞ்சம் மாடர்னா துறுதுறுன்னு பப்ளி கேரக்டர். சேரன் நல்ல டைரக்டர். அருமையான மனிதர். அவருடைய 'வெற்றிக் கொடி கட்டு' மறக்க முடியாத படம். இப்படியொரு டைரக்டர்கிட்டே நடிக்கப் போறதைப் பெருமையாவே நினைக்கறேன்" என்றவருக்கு விதி மீது அசாத்திய நம்பிக்கை.

"எதுக்குமே கடவுள் தலையில கோடு போட்டு வைச்சிருக்கணும். ஆலப்புழாவுல பிறந்த அழகான பெண் நான். ஒரு டாக்டராகணும்ங்கற கனவுலதான் பால்ய காலத்தைக் கழிச்சேன். ஆனா ஒரு நல்ல நாள்ல என் போட்டோ மலையாள மனோரமா அட்டைப் படத்துல வந்துச்சு. அதைப் பார்த்து டைரக்டர் சிபி மலயில் என்னை ஹீரோயினாக்கறேன்னாரு. என் வீடு ரணகளம் ஆச்சு. 'ஸ்க்ரீன் டெஸ்ட் பண்ணிப் பார்ப்போம். சரிவராட்டி உங்க இஷ்டம்'னு என் அப்பாகிட்டே சொன்னாரு டைரக்டர். என் நல்ல நேரம் நான் தேர்வாயிட்டேன். என் முடிவுல நான் உறுதியா இருந்ததால வீட்ல மறுபேச்சு சொல்லலை" என்கிற நவ்யா, பிசிறு தட்டாமல் தமிழ் பேசுவது இன்னொரு ஆச்சர்யம்.

"எனக்குத் தமிழ்ப் படங்கள் மட்டுமில்லை... தமிழ் மொழியும் பிடிச்சதாலதான் கோலிவுட்ல காலடி எடுத்து வச்சிருக்கேன். ஸ்கூல் படிக்கும்போது தமிழ் பேச்சுப் போட்டிகள்ல முதல் பரிசு வாங்கியிருக்கேன். பல பேர், நான் தமிழ்ப் பொண்ணுன்னுகூட நினைச்சிருக்காங்க. நாராயண பெருமான்ங்கிற என் தமிழ் ஆசானுக்குத்தான் எல்லா நன்றிகளும். இப்போ அமிர்தம்ல சொந்தக் குரல்ல பேசியிருக்கேன். இனியும் பேசுவேன்" என்கிறவருக்கு சமீபத்தில் பார்த்து மிகவும் பிடித்துப்போன படம் 'தம்பி'.

"தமிழ்ப் படங்கள் நிறையப் பார்ப்பேன். சிவாஜியோட நவரச நடிப்பை நான் முழுக்கப் பார்க்கலாம். 'தில்லானா மோகனாம்பாள்' தி பெஸ்ட். ஆனாலும் நான் நானா அடையாளப்படுத்திக்க விரும்பறேன். இந்த விஷயத்துல நான் பொம்பளை ரஜினி. அதாவது இந்த நவ்யா வழி தனி வழி" என்று சிரித்துக் கொண்டே ஒரு சல்யூட் வைக்கிறார்.

"என் நிஜப் பெயர் தன்யா நாயர். சினிமாவுக்காக நவ்யான்னு அம்மா மாத்தினாங்க. சினிமாவுல நவ்யா நாயர்னு டைட்டில் கார்டுல போட்டாங்க. ஓ.கே. சொன்னேன். தமிழ்ல நோ நாயர், நவ்யா மட்டும்தான்னு தங்கர் சார் சொன்னார். அதுக்கும் ஓ.கே. ஆனா நிறைய பேர் 'அப்போ நீங்க அந்த நவ்யா நாயர் இல்

லையா'ன்னு கேட்டு குண்டைத் தூக்கி வீசுறாங்க. இதனால மீண்டும் நவ்யா நாயர் ஆயிட்டேன். எந்தப் பெயரும் எனக்குச் சம்மதமே'' என்று பெயர்க் காரணத்தை ஒப்பித்தவரிடம் 'சம்பளம் அதிகம் என்பதால்தான் தமிழுக்கு வந்தீர்களா?' என்றால் வீராவேசமாக ஒரு பட்டியல் போடுகிறார்.

''தமிழ்ல நடிக்க பணம் மட்டும் தான் காரணம்னு சொல்ல முடியாது. மலையாளத்துலயும் கன்னடத்துலயும் ஒரே சம்பளம்தான். அங்கே போய் நாங்க நடிக்கலையா? அப்படிப் பார்த்தா உங்க ஊரு மீனாவும் சினேகாவும் ஏன் இப்போ மலையாளத்துல நடிக்கறாங்க. அதுமட்டுமா கிரணும் பாலிவுட் ஹீரோயின் கத்ரினா கைஃப்பும் கூடத்தான் இப்போ மலையாளத்துல டெண்ட் போட்டிருக்காங்க. ஏன்? நல்ல கேரக்டர் எங்கு கிடைக்குதோ அதைத் தவிர்க்காம செய்யணும். நான் நல்ல கேரக்டர்களுக்காகத்தான் தமிழுக்கு வந்திருக்கேன். இனி நான் நம்பர் ஒன் இடத்தைப் பிடிப்பேன்ங்கிற நம்பிக்கை எனக்கிருக்கு'' என்கிறார் தன்னம்பிக்கை வழிய.

- ச.ந.கண்ணன்

படங்கள் : சங்கர் சத்யமூர்த்தி



# அசத்தும் அண்ணாநகர்..



• காணிக்கை மேரி



• சுரேஷ்பாபு



• பவானி சங்கர்



• அம்பிகாபதி



• இராமலிங்கம்

மத்திய சென்னை மாவட்டத்துக்கு முக்கியமான தொகுதி அண்ணா நகர் என்றால், வடசென்னை மாவட்டத்துக்கு முக்கியமான தொகுதி ஆர்.கே.நகர் எனப்படும் ராதாகிருஷ்ணன் நகர். முதலில் அண்ணா நகரை பார்ப்போம். இங்கு பலர் போட்டியிட்டாலும் நேரடி மோதல் தி.மு.க.வின் ஆற்காடு வீராசாமிக்கும் ம.தி.மு.க.வின் விஜயா தாயன்பனுக்கும்தான்.

கடந்த பத்து ஆண்டுகளாக எம்.எல்.ஏ.வாக இருக்கும் ஆற்காடு வீராசாமிக்குத் தொகுதிக்குள் தனிப்பட்ட முறையில் நல்ல செல்வாக்கு இருக்கிறது.

ம.தி.மு.க.வைச் சேர்ந்த விஜயா தாயன்பன் கட்சியின் மாநில மகளிரணிச் செயலாளராக இருக்கிறார். தொகுதிவாசியாக இவர் இல்லாதது மிகப்பெரிய பலவீனம். பலம் அ.தி.மு.க.வின் வாக்குகள்.

"இந்த முறை பெண் வேட்பாளரான என்னை வெற்றிபெற வைப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் களமிறங்கியுள்ளேன். நான் வெளியூர்க்காரர் என்பது ஒரு பிரச்னையே அல்ல. ஏனென்றால் அண்ணா நகரில் இதற்கு முன்பு பல வெளியூர்க்காரர்கள் ஜெயித்துள்ளனர். நான் தொகுதி மக்களைச் சந்தித்துப் பேசியதில் வெள்ள நிவாரணம், சுனாமி மற்றும் தொகுதிக்குள் இருந்து கொண்டே தொகுதிக்காக நல்ல பணிகள் எதையும் செய்யாதது என்று பல விஷயங்களில் வீராசாமி மீது மக்கள் அதிருப்தியில் இருப்பதை உணர முடிந்தது. அதுவெல்லாம் எங்களுக்குச் சாதகமான அம்சங்கள்" என்றார் நம்மிடம் பிரசாரத்தில் இருந்த விஜயா தாயன்பன்.

ஆனால் "ஆற்காட்டார் செய்த பணிகள் சூரியனுக்கு வெற்றி வாய்ப்பினை உறுதி செய்துவிட்டன" என்கிறார் தி.மு.க. பகுதிச் செயலாளரான ராமலிங்கம்.

"சிமெண்ட் சாலை, வகுப்பறைகள், சமூகக் கூடங்கள் என்று பல அத்தியாவசியப் பணிகளைச் செய்து தந்திருக்கும் எங்கள் எம்.எல்.ஏ.வை யார் வேண்டுமானாலும் நேரில் சந்திக்க முடியும். பலர் அவர் வாக்கிங் போகும்போதே வந்து தங்களுடைய குறைகளைச் சொல்லிப் பயன்பெறுகின்றனர். தன்னுடைய தொகுதி மேம்பாட்டு நிதியைப் பயன்படுத்தி நிறைய நலப்பணிகளையும் செய்துள்ளார்" என்கிறார் அவர்.

"அம்மா நிறைய செஞ்சிருக்காங்க. அதனால என் வோட்டு அம்மாவுக்குத்தான். ஆனா இந்தத் தடவை வைகோ கட்சி நிக்குதாம்ல. அதனால பம்பரத்துக்குத்தான் என் வோட்டு" என்கிறார் குடும்பத் தலைவியான காணிக்கைமேரி.

"சாதாரண மக்கள் எம்.எல்.ஏ.வைச் சந்திக்கவே முடியாது.

அவருக்கு கலைஞர் கூடவே இருக்கத்தான் நேரம் சரியாக இருக்கிறதே தவிர, தொகுதியைக் கவனிக்க நேரமில்லை. நீண்டகாலமாக இருக்கும் கழிவு



# தொகுதி விசிட்

* ஆற்காடு வீராசாமி



வந்த பாதாள சாக்கடைத் திட்டம் அவருக்குத் தொகுதியில் நல்ல பெயரைச் சம்பாதித்துக் கொடுத்துள்ளது. இதுதவிர அடிப்படை வசதிகள் பலவற்றைச் செய்துள்ளதால் இங்கு தி.மு.க. ஜெயிப்பது நிச்சயம்'' என்றார்.

"வெள்ளம் வந்தபோது ஒரு சாதாரண சமூக சேவையாளர் செய்த அளவுக்குக் கூட எம்.எல்.ஏ. செய்யவில்லை. தொகுதிப் பிரச்னையை சட்டமன்றத்தில் எடுத்து வைக்க அதிக வாய்ப்புகள் இருந்தும் அதைச் செய்யத் தவறிவிட்டார். தேர்தல் பிரசாரத்தின்போது, தன் தொகுதிப் பிரச்னைக்காக எத்தனை முறை கேள்வி கேட்டுள்ளார், அவற்றில் எவை செயல்

* விஜயா தாயன்பன்



# ஆட்டம் காட்டும் ஆர்.கே.நகர்!

நீர்ப் பிரச்னையைத் தீர்த்துவைக்க இதுவரை அவர் எந்த முயற்சியும் செய்யவில்லை. அதிருப்தி அதிகமாக இருக்கிறது. ஆகவே இந்த முறை பம்பரம்தான் ஜெயிக்கும்'' என்றார் ம.தி.மு.க. பகுதிச் செயலாளரான அம்பிகாபதி. ஆனால் இவருக்கு சீட் தரப் படவில்லை என்ற அதிருப்தி ம.தி.மு.க.வில் இருப்பதாகவும் இந்த அதிருப்தி தங்களுக்குச் சாதகமாக முடியும் என்றும் கூறுகின்றனர் உடன்பிறப்புகள்.

**கா**ங்கிரஸ் கவுன்சிலரான சுரேஷ் பாபுவிடம் பேசியபோது, "ஆற்காட்டார் அமைச்சராக இருந்தபோது கொண்டு

வடிவம் பெற்றுள்ளன என்பதைப் பட்டியல் போட்டு மக்கள் முன் வைக்க வேண்டும்'' என்கிறார் பவானி சங்கர். இவர் ஏரியா அ.தி.மு.க. கவுன்சிலரும் கூட.

"தொகுதிக்கு நிறைய நல்லது செய் திருக்காரு. ஜெயிச்சா மந்திரியாகிறது நிச்சயம். அதனால நான் சூரியனுக்குத் தான் வோட்டு போடப் போறேன். என் வீட்டுக்காரி அந்தம்மாவுக்குப் போடப் போறேன்னு சொல்றா. அது அவங்க


• பாபு சுந்தரம்


• மீனா


• சர்தார்


• வேணுகோபால்


• ராணி

இஷ்டம்" என்று சொன்னார் தொகுதியில் மளிகைக்கடை நடத்தும் சரவணன்.

இந்தத் தொகுதியின் பிரபல மருத்துவரும், மூதத அரசியல் வாதியுமான டாக்டர் ஹண்டே, பா.ஜ.க. சார்பாகப் போட்டி யிட்டு அ.தி.மு.கவினரை அச்சமூட்டியிருக்கிறார். இவர் பழைய அ.தி.மு.கவினரின் வாக்குகளைப் பிரித்துவிடுவார் என்றும் இது தங்களுக்கு மிகப்பெரிய நஷ்டம் என்றும் புலம்பி வருகின்றனர் ர.த்தங்கள். தங்கள் தலைவரை 'நாகரிகமற்ற அரசியல்வாதி' என்று அறிக்கை மூலம் திட்டிய ஆற்காட்டாரை தோற்கடித்தே தீருவோம் என்று கொக்கரிக்கின்றனர் ம.தி.மு.க.வினர். ஆனால் கலைஞர், பேராசிரியர் போன்ற பலரை ஜெயிக்க வைத்த இந்தத் தொகுதியில் மீண்டும் தி.மு.க. ஜெயிக்கவே வாய்ப்புகள் அதிகம்.

ஆர்.கே.நகரிலும் தேர்தல் காற்று சற்று பலமாகவே வீசு கிறது. புழுதியுடன். பதற்றமிகு தொகுதியாக வர்ணிக்கப்படும் இந்தத் தொகுதியில் மோதும் சேகர்பாபுவும், ராயபுரம் மனோவும் கொம்பு சீவிவிடப்பட்ட காளைகள். 'தேர்தலை நினைத்தாலே அச்சமாக இருக்கிறது' என்கின்றனர் தொகுதி மக்கள்.

அ.தி.மு.க.வின் வடசென்னை மாவட்டச் செயலாளரான சேகர்பாபு, தனது செல்வாக்கைப் பயன்படுத்தி மாநில அமைச் சர்கள் அனைவரையும் தொகுதிக்கு அழைத்துவந்தது, பள்ளிக் கூடங்கள், மருத்துவமனைகள் பலவற்றைக் கொண்டுவந்திருப் பது போன்றவற்றால் தொகுதிக்குள் அவருக்கு நல்ல பெயர் இருக்கிறது. சில அதிரடியான செயல்பாடுகள் இவருக்குப் பலவீனம்.

காங்கிரஸ் வடசென்னை மாவட்டத் தலைவரான மனோ, பத்துவருடங்களாக மாநகராட்சி உறுப்பினராக இருக்கின்றனர். கூட்டணி வலுவாக இருப்பது இவருக்கு மிகப்பெரிய பலம். ஆனால் விநாயகமூர்த்தி - செல்லக்குமார் போன்ற விவகாரங் களில் இவரது ஈடுபாடு பலவீனம். இவருக்காக தேர்தல் வேலை செய்ய இப்பொழுதே மாவட்டத்தின் ஒட்டு மொத்த காங்கிரஸ் தொண்டர்களும் களத்தில் இறங்கிவிட்டனர்.

"பிரசாரத்தின்போது ஐந்து மேம்பாலங்கள் கட்டித்தருவதாக முதல்வரே சொன்னார். ஆனால் ஒன்றுமே நடக்கவில்லை. போக்குவரத்து வசதி போதுமானதாக இல்லை. கடந்த ஐந்து வருடங்களாக சாலைகள் மிகவும் மோசமாக உள்ளன. சேகர்பாபு எல்லா அமைச்சர்களையும் தொகுதிக்குள் அழைத்து வந்து ஷோ காட்டியதோடு சரி. அதனால் தொகுதிக்குப் பலனேதும் இல்லை" என்றார் ஏரியா காங்கிரஸ் பிரமுகரான பாபுசுந்தரம்.

"அப்படியா?" என்றோம் சேகர்பாபுவிடம்.

"நான் எம்.எல்.ஏ.வாகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது இந்தத் தொகுதி சுகாதாரம், அடிப்படை வசதிகள், போக்குவரத்து நெரிசல், பள்ளிக்கூடங்கள் இல்லாமை என்று மோசமான நிலைமையில் இருந்தது. ஆனால் நான் வந்தபிறகு, ஐந்து பள்ளிக் கூடங்கள், ஆறு மருத்துவமனைகள் கட்டப்பட்டுள் ளன. இருள் சூழ்ந்த பகுதிகளில் 30 லட்சம் செலவில் மின் கோபுர விளக்குகள் கொண்டு வந்துள்ளேன். இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். அம்மாதான் எங்களுக்கு முகவரி




அவர் செய்த சாதனைகளைச் சொல்லி வாக்கு கேட்போம். அதுவே எங்களுக்கு வெற்றியைத் தரும். மாற்று முகாமைப் பற்றிப் பேசப் போவதில்லை" என்றார் சேகர் பாபு.

"மனோ ரொம்ப நல்ல மனுஷன். அவரு எங்க தொகுதிக்கு நிறைய நல்லது செய்வார்னு நம்பறோம். அவருக்குத்தான் எங்க வோட்டு" - இது குடும்பத் தலைவி மீனாவின் கருத்து.

"அனைத்து இன மக்களும் இருக்கும் இந்தத் தொகுதியில் தி.மு.க. கூட்டணி வலுவாக உள்ளது. கழிவுநீர்ப் பிரச்னை மற்றும் குண்டும் குழியுமான சாலைகளுக்கு இன்னமும் விடிவு கிடைக்கவில்லை. பதற்றமிகு தொகுதியாக இருப்பதால் அராஜகம் எதுவும் நடக்காத பட்சத்தில் காங்கிரஸின் வெற்றி நிச்சயம்" எனகிறார் முன்னால் எம்.எல்.ஏ.வான வேணுகோபால்.

**கா**ய்கறி வாங்க வந்திருந்த குடும்பத் தலைவரான ஆறுமுகத்திடம் பேச்சுக் கொடுத்தபோது, "சேகர்பாபு அடிக்கடி தொகுதிக்குள்ள வர்றவரா இருக்காரு. நிறைய பள்ளிக்கூடம் கொண்டு வந்திருக்காரு. அந்த ஒரு காரணத்துக்காகவே நான் அவருக்குத்தான் வோட்டுபோடப் போறேன்" என்றார்.

"எப்போதுமே நாங்க கைச்சின்னத்துக்குத்தான் வோட்டுப் போடுவோம். இப்ப இருக்குற எம்.எல்.ஏ. அந்த அளவுக்குத் திருப்தியா எதுவுமே செய்யல. அதனால இந்தத் தடவை காங்கிரஸ்தான் ஜெயிக்கும்" - இது தொகுதிவாசி ராணி.

வீட்டுவாசலில் உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த சர்தார் நம்மைப் பார்த்து, "நான் ம.தி.மு.க.காரங்க. ஆனா இந்த முறை கைச்சின்னத்துக்குத்தான் வோட்டுப் போடப் போறேன். மனோ நல்லது செய்வார்னு நாங்க நம்பறோம்" என்றார்.

ஒருமுறை ஜெயித்தவர் மறுமுறை ஜெயித்ததில்லை என்ற சென்டிமெண்ட் கொண்ட இந்தத் தொகுதியில், இரு வேட்பாளர்களும் சமபலத்தில் இருக்கின்றனர். அம்மா ஸ்பெஷலாகப் பிரசாரம் செய்தால் வெற்றி உறுதி என்று ரத்தங்கள் சொல்லிக் கொண்டிருக்கின்றனர். தமது செல்ல சிஷ்யரான மனோவுக்காக இங்கு அதிக நாள் பிரசாரம் செய்ய முடிவெடுத்துள்ளார் ஜி.கே.வாசன். ஆக, இந்தத் தொகுதியில் யாருக்கு வெற்றி என்பதை அவ்வளவு எளிதாகச் சொல்லிவிட முடியாதபடி ஆட்டம்காட்டிக் கொண்டிருக்கிறது ஆர்.கே.நகர்.

- **ஆர்.முத்துக்குமார்**

படங்கள் : **ராஜன்**



• இராயபுரம் மனோ





• சேகர்பாபு

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33

? கலர் டீ.வியையே இலவசமாகத் தருவதாகச் சொல்லும் கருணாநிதி, அரிசிக்கு மட்டும் ஏன் கிலோ இரண்டு ரூபாய் என்று விலை வைக்கிறார்?

! விஜயகாந்த் இலவசம் என்று அறிவிக்க ஏதாவது விட்டுவைக்க வேண்டாமா? அதற்குத்தான்.

● ஆர்.எஸ். லக்ஷ்மி, கோவை - 41

? "என் சாதனைகளை விவரிக்க நேரமே போதாது" என்கிறாரே ஜெயலலிதா?

! அந்த 'தன்னடக்கத்தை' விவரிக்க இந்தப் பக்கம் போதாது!

● ப. சுகுமார், தூத்துக்குடி

? இத்தனை வயதுக்குப் பின்னரும் கருணாநிதி, அன்பழகன்

# இலவசங்களைத் தடைசெய்யுமா..



● தன்னடக்கச் செம்மல்!

போன்றோர் தேர்தலில் நிற்க வேண்டுமா? இளைஞர்களுக்கு வாய்ப்பளிக்கலாமே?

! வழிகாட்டுதலுக்கு மூத்தவர்கள் சிலர் இருப்பது அவசியம். இளைஞர்களுக்கு வாய்ப்பளிக்கப்பட்டிருப்பதும் உண்மை. ஆனால், மூத்தவர்கள் ஆரோக்கியமான வழி காட்டுகிறார்களா என்பதுதான் கேள்விக்குறியாகிவிட்டது.

● என். சண்முகம், திருவண்ணாமலை

? பத்தாம் வகுப்பு தமிழ்த்தாளில் உலக ரட்சகன் யார் (சிவன், திருமால், இயேசு) என்ற கேள்வி இடம்பெற்றது இந்துக்களிடையே கலகலப்பை ஏற்படுத்தியிருப்பது பற்றி...?



● தலைவிலா? காதிலா?

! எந்த விடை எழுதினாலும் சரியே என்று பின்னர் அறிவித்தது இருக்கட்டும். மதங்களிடையேயும் மதத்தின் உட்பிரிவுகளுக்கிடையேயும் பிரிவினை விதைக்கும் இந்த விஷமத்தனத்துக்குப் பொறுப்பானவர் யார் என்று கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்.

● ச. தமிழ்ச்செல்வி, பாண்டிச்சேரி - 5

? வேட்பாளர் பட்டியல் வெளியான பிறகும் கட்சிகளில் நடிகர் - நடிகைகள் இணைந்து வருவது எதைக் காட்டுகிறது?

! கிளாமரை நம்பி அரசியல் குட்டிச்சுவராகிக் கொண்டிருப்பதை; அரசியலை நம்பி கிளாமர் மங்கிக் கொண்டிருப்பதை.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? தேசிய கீதத்தின் இறுதியில் வரும் 'ஜெயஹே' என்ற சொல்லில், 'ஜெ' என்பது நமது முதல்வரைக் குறிப்பதாக மேல்சபை எம்.பியும் ஜெ.வின் சட்ட ஆலோசகருமான ஜோதி சொல்கிறாரே?

! அருவருக்கத்தக்க புகழ்ச்சி என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். தேசிய கீதத்தை அவமதித்ததற்காக, சட்ட ஆலோசகர் ஜோதி மீது சட்டபூர்வமாக வழக்கே தொடுக்கலாம்! ❒

● என்.கோதண்டராமன், மதுராந்தகம்

*? எதெதற்கோ தடை விதிக்கும் தேர்தல் கமிஷன், தேர்தல் அறிக்கைகளில் இலவசம் என்கிற வார்த்தையை எந்தக் கட்சியும் பயன்படுத்தத் தடை விதித்தால் என்ன?*

! சபாஷ்! நடைமுறைக்கு வரவேண்டிய நல்ல யோசனை. தேர்தல் நன்னடத்தை விதிகளைச் சட்டபூர்வமாக மீறும் வழிதான் இந்த இலவசங்கள். வோட்டுக்குத் தரப்படும் லஞ்சம். பார்க்கப் போனால் இலவசம் என்பதாக எதுவும் கிடையாது. எல்லாமே மக்களிடமிருந்து வசூலிக்கப்படும் வரிதான். வேறு உருவில் அவர்களிடம் திரும்பி வருகிறது.



• அடுத்தது கர்சீஃப்!

● மல்லிகைமன்னன், மதுரை - 17

*? மார்க்கெட் இழந்திருக்கும் பாக்கியராஜ், அ.இ.மு.க.வில் எம்.ஜி.ஆர். பெயர் களங்கப்படுத்தப்படுவதால்தான் தாம் தி.மு.க.வில் சேர்ந்ததாகச் சொல்கிறாரே?*

! 'அரசியல் மார்க்கெட்டையாவது பிடிப்போம்' என்றுதான் காமெடி கதை-வசனம் எழுதிக்கிட்டிருக்காரு!



• அரதப் பழசு!

● ஆர்.வஸந்தா, சென்னை - 28.

*? உண்ணாவிரதம் இருந்த மேதா பட்கரின் நியாயமான கோரிக்கைக்கு அரசு இணங்கிவிட்டால் வானம் இடிந்து போய்விடுமா?*

! வானம் இடிந்து போய்விடுகிற விஷயமாக அவர் எதையும் கேட்டுவிடவில்லை. நர்மதை அணையின் உயரத்தை அதிகரிப்பதால் நீரில் மூழ்கவிருக்கும் கிராமங்களிலுள்ள ஆயிரக்கணக்கான ஏழை எளிய மக்களுக்கு, வேறு வாழ்விடம் கொடுங்கள் என்றுதான் கேட்கிறார். அரசோ, சில ஆயிரம் ரூபாய் நஷ்டஈடு கொடுத்துவிட்டு திட்டத்தை நிறைவேற்ற அவசரம் காட்டுகிறது. கோரிக்கை, உண்ணாவிரதம் இரண்டுமே நியாயம். அரசின் பிடிவாதம்தான் அநீதி.

# ...தேர்தல் கமிஷன்?

● எம். இராஜேந்திரன், லால்குடி

*? இலவச டீ.வி. கொடுப்பவர்கள், இலவச கேபிள் கனெக்ஷனும் தருவார்களா?*

! அதையும் அறிவிச்சுட்டாரே! அடுத்து, சீரியல் பார்த்த பிறகு கண் துடைச்சுக்க கர்சீஃப் இலவசம்; சமைக்க மறந்தால் சாப்பாடு இலவசம்; படிக்காமல் டீ.வி. பார்த்தால் பரீட்சைகளில் 'பாஸ்' இலவசம்!

● க.மோ. சிவா, கந்திகுப்பம்

*? ஒருதலைபட்சமாக, சில கட்சிகளுக்கு ஆதரவாகத் தொடர்ந்து*

## தராசு

**செய்தி வெளியிடும் பத்திரிக்கைகள் பற்றி...?**

! நீங்களேதான் சொல்லிட்டீங்களே - அவை பத்திரிகைகள் அல்ல; பத்திரிக்கைகள் என்று! பத்தி பத்தியாச் செய்தி திரிக்கறாங்க! நீங்கதான் (வாசகர்கள்) உஷாரா இருக்கணும்.



* ஆசின் அநீதி!

● **சோழா புகழேந்தி, கரியமாணிக்கம்**

***? தர்மம் தலை காக்கும் எனில் ஹெல்மேட் எதற்கு...?***

! தர்மம் என்பது தான - தர்மம் மட்டுமல்ல... வாழ்க்கை நெறி. ஹெல்மேட் அணிவது, தலையைக் காப்பதற்கான தர்மம்!

● **அ.சா. குருசாமி, செவல்குளம்**

***? தயாநிதி மாறனின் 'ஒண்டிக்கு ஒண்டி' சவால் எப்படி.?***

! 'இன்டர்நெட்டில் சந்திப்போம்' என்று இணைய தள சவால் விட்டிருந்தால் கொஞ்சம் மாடர்ன் ஆகவாவது இருந்திருக்கும். இது அரதப் பழசான குழாயடிச் சண்டை தான்!

● **ஆர். விஸ்வநாதன், சென்னை - 4 ***

***? யாருக்கும் வாக்களிக்க விரும்பவில்லை என்று ஒரு வாக்காளர் தெரியப்படுத்துவதால் என்ன பயன் ஏற்படப் போகிறது?***

! தேர்தல் வாக்குறுதிகள், அன்பளிப்புகள், பொய்ப் பிரசாரங்கள், தனிநபர் வழிபாடு, இவற்றில் மயங்காமல், சிந்தித்து வோட்டளிக்கும் வாக்காளருக்கு ஒரு வரப் பிரசாதம். இவர்களின் எண்ணிக்கை அதிகரிக்கும்போது தான் வாக்காளரின் நம்பிக்கையைப் பெறக்கூடிய சிறந்த வேட்பாளரை நிறுத்த வேண்டும் என்ற எண்ணம் கட்சிகளுக்கு ஏற்படும்.

* தேர்தல் கதை - வசனம்!



● **ஆர். ராஜதுரை, சீர்காழி**

***? நேபாளத்தில் உள்ள ஒரு மாவட்ட நீதிமன்றம், பசுவைக் கொன்ற பெண்ணுக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் சிறைத் தண்டனை விதித்துள்ளது பற்றி...?***

! ஜனநாயகம் கோரும் மக்களைத் தடியால் அடித்து வீழ்த்தி, தலையில் உதைக்கும் நேபாள ராணுவத்தினருக்கு என்ன தண்டனை? எப்போது?

● **அ. சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21**

***? 'அ.தி.மு.க.வும் ம.தி.மு.க.வும் ஒரு கொடியில் பூத்த மலர்கள்' என்கிறாரே வைகோ?***

! ரொம்ப சரி. 'தி.மு.க.விடம் அதிருப்தி' என்ற கொடியில் பூத்த மலர்கள்தாம் இரண்டுமே. வாடி உதிர்வதற்குள் வாக்காளர் கொய்து சூடிக் கொள்வார்களா? தலையிலா? காதிலா?

▢ ரூ.100 பரிசு பெறுபவர் :
**என்.கோதண்டராமன்,**
1-1/51C சுமங்கலி நகர்,
அருணாஸீஸ்வரன் கோயில் தெரு,
மதுராந்தகம் - 603 306
காஞ்சிபுரம் மாவட்டம்.

* ரூ.50 பரிசு பெறுபவர் :
**ஆர்.விஸ்வநாதன்,**
D3, சாந்தி அபார்ட்மெண்ட்ஸ்,
4, அப்பு தெரு,
மயிலாப்பூர்,
சென்னை - 600 004

# நடையைக் கட்டிய நாட்டாமை!

கிட்டத்தட்ட ஒரு மாத காலமாகப் புகைந்து கொண்டிருந்த விவகாரத்துக்கு புள்ளி வைத்துவிட்டார் சரத்குமார். 'இப்போது தி.மு.கவுக்கு வாய்மையும் பேசாத, வாயும் பேசாத அடிமைகளே தேவைப்படுகிறார்கள்' என்று காரசார மாக அறிக்கை விட்டு கழகத்திலிருந்து நடையைக் கட்டிவிட்டார் நாட்டாமை.

தி.மு.கவில் இருந்தாலும் ராதிகாவுட னான திருமணம்தான் கலைஞர் குடும் பத்தோடு சரத்துக்கு நெருக்கத்தைக் கூட்டி யது. ராஜ்யசபா உறுப்பினரானார். படம் எடுத்து கடனாளியாக இருந்த அவரது கடன் தொல்லை கொஞ்சம் குறைந்தது. 2004 பாராளுமன்ற தேர்தலுக்குப் பிறகு, தி.மு.க. தலைமையுடனான அவரது உறவில் விரிசல் விழ ஆரம்பித்தது. குறிப் பாக சீனியர்கள் பலர் இருக்க, டில்லியில் தயாநிதி மாறனுக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் சரத்துக்கு எரிச்சலூட்டி யது. தமக்கும் அமைச்சர் பொறுப்பு கிடைக்கும் என்று எதிர்பார்த்தார் சரத்.

ஆனால் கலைஞர் கண்டுகொள்ள வில்லை. எல்லாவற்றுக்கும் உச்சகட்ட மாக, தயாநிதி மாறன் தபால் தலை வெளியிட நடிகர் விஜயை டில்லிக்கு கூப்பிட்டது அமைந்து விட்டது. தாம் ஓரங்கட்டப்படுகிறோம் என்ற உணர்வும் ஏற்பட்டுவிட்டது.

இதற்கிடையில் அவருடைய உறவின ரான பத்திரிகை அதிபர் மூலம் ஆளும் கட்சிக்கு பலம் சேர்க்கத் தூண்டில் போடும் முயற்சியும் துவங்கியது. சரத் குமார் குடும்பத்துக்கும் உரிமையாக இருந்த 'தினகரன்' பத்திரிகையை கலாநிதி மாறன் வாங்கியது சரத்துக்குத் துளிக்கூட பிடிக்கவில்லை. அதன் பின் தினகரன் ஒரு ரூபாய்க்கு விற்கப்பட, அவரது குடும்ப சொந்தங்களின் பத்திரிகைகளின் விற் பனை அடிபட, ஒரு குறிப்பிட்ட இனத் தைப் பாதிக்கிற விவகாரமாக இதை எடுத்துக்கொண்டு போராடத் துவங்கி னார்கள். ஏற்கெனவே மெர்க்கன்டைல் வங்கி விவகாரத்தில் நாடார்களுக்கு ஆதரவாக கலைஞர் செயல்படவில்லை என்ற வருத்தம் சரத்துக்கு இருந்தது. பத்திரிகை அதிபர் ஒரு பக்கம் வலை வீச, அ.தி.மு.க. மற்றும் உளவுத்துறையால்



ஊக்கப்படுத்தப்பட்ட அவரது ரசிகர்கள், அவரை தி.மு.கவிலிருந்து வெளியேற வற்புறுத்த, கடைசியில் தி.மு.கவிலிருந்து விலகிவிட்டார் சரத். பொது வாழ்க் கையில் அவர் எடுத்துள்ள இந்த நிலை, அவரது குடும்ப வாழ்க்கையைக்கூட பாதிக்கும் என்கிறார்கள். கலைஞர் தரப்பிலிருந்து சரத்துக்கு தூதுவிட்டுப் பார்க்கிறார்கள்.

கருணாநிதிக்கு அவர் எழுதிய கடிதத்தில் 'ஜாதி, மத, மொழி, பேதமற்ற சமுதாயத்தை உருவாக்கப் பாடுபடுவோம்' என்று முழங்கியிருக்கிறார். ஆனால் 'ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் தோளில் உட்கார்ந்துகொண்டு இதைச் சொல் கிறாரே சரத்' என்று வியக்கிறார்கள் மக்கள்.

- கௌசி



தலைவருக்கு வணக்கம் சொல்லுங் கப்பா.

**நால்வரும்** (கை குவித்து) : வணக்கம் தலைவரே.

**கலைஞர்** : வணக்கம். சென்னைத் தமிழுக்கு வணக்கம். அதன் சுவைக்கு வணக்கம். உங்களை எதற்கு இங்கே அழைத்தேன் தெரியுமா?

**கபாலி** : தெரியாதுங்களே. முக்கிய மான மேட்டரு... வாங்கப்பான்னு கூப்ட்டாங்க.

**கலைஞர்** : நேற்று என் அருமை தயாநிதி, வைகோவை நோக்கிச் சவால் விட்டுப் பேசியதைக் கேட்டீர்களா?

**பீட்டர்** : கேட்டோமே. டக்கரா பேசுனாரு. நாங்கூட அப்பப்ப 'பீல்' பண்ணுவேன். இன்னாடா இந்தத் தம்பி பாட்டுக்கு டெல்லியில குந்திக்கினு ஒத்த ருவா டெலிபோனு, வெள்ளக்

# "ஒண்டிக்கு ஒண்டி வர்றியா?"



**லோ**க்கல் அரசியலில் 'ஷூடு கட்டி' இறங்கிவிட்டார் தயாநிதி மாறன். 'ஒண்டிக்கு ஒண்டி வர்றியா?' என்று அவர் வைகோவுக்கு சவால் விட்ட அடுத்த நாள், கலைஞர் வீட்டில் நடந்த சம்பவம் இது...

**ஆற்காடு வீராசாமி** : தலைவரே வணக்கம். நீங்க சொன்ன மாதிரி சென்னை பாஷை நல்லாத் தெரிஞ்ச நாலு பேரைக் கூட்டிட்டு வந்திருக் கேன். இவன் கண்ணம்மாபேட்டை கபாலி, இவன் புதுப்பேட்டை பீட்டர், அவன் திருவல்லிக்கேணி ஏழுமலை, அடுத்தவன் பர்மா பஜார் பக்கிரி.

காரன்கூட மீட்டிங்னு கெடக்குதே. நம்ம ஊரு பக்கமே வராதா? தலீவருக்கு அப்பால கட்சிய யார் காப்பத்தற துன்னு நெனச்சுப்பேன். நேத்தோட அந்த பீலிங் பூடுச்சி.

**மு.க.ஸ்டாலின் :** அந்தக் கவலை வேண்டாங்க. கட்சியைப் பார்த்துக்க நான் இருக்கேன். ஆனாலும் தயாநிதி யோட துணையும் இருந்தா நல்லது. அவர் சென்னை பாஷைய இன்னும் நுணுக்கமாத் தெரிஞ்சுக்க ஆசைப்பட றார். நீங்கதான் கத்துக் கொடுக்கனும். அதுக்குத்தான் வரச் சொன்னோம்.

**கலைஞர் :** சங்கத் தமிழாக இருந் தால் சொடுக்குப் போடும் நேரத்துக்குள் அடியேனே கற்றுத் தந்துவிடுவேன். இதுவோ சங்கடத் தமிழ். ஆகையால் தான் உங்களை அழைத்து வரச் சொன்னேன்.

**ஏழுமலை :** இன்னா தலீவரே, தம்பி எவ்ளோ பெரிய ஆளு. அவ ருக்குப் போய் நாங்க சொல்லிக் கொடுக்கறதா?

**தயாநிதி மாறன் :** சே! சே! நான் ஒண்ணும் அவ் வளவு பெரிய ஆளில்லே. தாத்தா இந்தி படிக்க வெச்சி டெல்லிக்கு அனுப்பினார். நானும் ஏதோ எனக்குத் தெரிஞ்ச நாலு விஷயங் களைச் சொல்லி காலத்தை ஓட்டறேன்.

**பக்கிரி :** பாத்தியா கபாலி. இன்னா அடக்க மாப் பேசுறாரு. உங்களுக்கு இன்னா டவுட்டு இருந்தாலும் கேளுங்க. நாங்க க்ளியர் பண்றோம்.

**தயாநிதி :** தேங்க்ஸ். வைகோகிட்டே 'ஒண்டிக்கு ஒண்டி' வான்னு சொல்லிட் டேன். அவரும் வந்து நின்னுட்டாரு. அடுத்து என்ன பேசறது?

**மு.க.ஸ்டாலின் :** தயாநிதி ஒரு யோசனை. உட்கார வெச்சு கத்துக் கறதைவிட இவங்களை நடிக்கவிட்டு அதைப் பார்த்து கத்துக்க. ஈஸியா புரியும்.

**கலைஞர் :** அருமையான யோசனை. நான் வேண்டுமென்றால் கதை, வசனம் எழுதிக் கொடுக்கட்டுமா?

**ஆற்காடு வீராசாமி :** தலைவரே கொஞ்சம் சும்மா இருங்க. நீங்க எழுதற வசனத்தை இவங்க பேசினா வாய்



களுக்கிக்கும். அவங்களே பேசி நடிக் கட்டும். கபாலி நீதான் வைகோன்னு வெச்சுக்க. பீட்டர்தான் தம்பி தயாநிதி. எங்கே நடிச்சுக் காட்டுங்க.

*(கபாலியும், பீட்டரும் நடிக்க ஆரம்பிக்கிறார்கள்)*

**கபாலி :** இன்னா?

**பீட்டர்** : இன்னா?

**கபாலி** : இன்னாங்கறே?

**பீட்டர்** : நீ இன்னாங்கறே?

**கபாலி** : இன்னாமோ சொன்னியே. ஒண்டிக்கு ஒண்டி வான்னு. தோ வந்துட்டேன்: இன்னா பண்ணப் போறே?

**பீட்டர்** : இன்னா பண்ணச் சொல்றே?

**ஏழுமலை** : இன்னாப்பா? இன்னா மேட்டரு?

**கபாலி** : வா ஏளுமல. இவன இன்னான்னு கேளு.

**பீட்டர்** : இன்னா? உனக்குத்தான் ஆள் கீதா? எனக்கும் கீது. பக்கிரி.

**பக்கிரி** : இன்னா நைனா?

**பீட்டர்** : இன்னாமோ சொல்றாங்க. இன்னான்னு கேளு.

**பக்கிரி** : இன்னா வாத்தி யாரே இன்னா?

**கபாலி** : நீ இன்னா குறுக் கால? அவனுக்கும் எனக்கும் தான் பேச்சு. நீ வராத.

**பக்கிரி** : வந்தா இன்னா பண்ணுவே?

**ஏழுமலை** : இன் னடா ராங் பண்றீங்களா?

**பீட்டர்** : இன்னாது? யாரு ராங் பண்றது? இன் னாமோ உங்களுக்கு டைம் சரியில்ல. மரியாதையா திரும் பிப் பூடுங்க.

**கபாலி** : இன்னாத்துக்குப் போவணும். இன் னாமோ பெருசா ஃபிலிம் காட்னே. இப்ப இன்னாத் துக்கு ஜகா வாங்கற?

**பீட்டர்** : யார் ஜகா வாங்கறது? வர்றியா ஒண் டிக்கு ஒண்டி.?

**கபாலி** : அதுக்குத் தானே வந்து கிறேன். இன்னா சொல்லு.

**பீட்டர்** : நீ இன்னா சொல்றே?

**கபாலி** : இப்ப இன்னாங்கறே?

**பீட்டர்** : நீ இன்னாங்கறே?

**கலைஞர்** : அடடா! மறுபடியும் ஆரம்பித்த இடத்துக்கே வந்துவிட்டீர்களே. மேலே சொல்லுங்கள்.

**கபாலி** : அவ்ளோதாங்க. இப்டியேதான் சுத்தி சுத்தி வரணும்.





**மு.க.ஸ்டாலின்** : இன்னா தயாநிதி புரிஞ் சுதா? இன்னா சொல்றே?

**தயாநிதி மாறன்** : இன்னா சொல்றது? அவங் களை அனுப்பிடுங்க.

**ஆற்காடு வீராசாமி** : இன்னாங்கப்பா? மறு படியும் டவுட்டுன்னா கூப்பிடறோம். போய்ட்டு வாங்க.

*(நான்கு பேரும் கும்பிடு போட்டுவிட்டுச் செல்கிறார்கள்)*

**கலைஞர்** : இன்னா இது? இன்னா நடந்துச்சு? இன்னான்னே புரியலியே. இன்னா ஸ்டாலின்? இன்னா தயாநிதி? இன்னா ஒருத்தனையும் காணோம்? இன்னா செய்தாரே ஒருத் தர்... இன்னா செய்தாரே... இன்னாது குறளே மறந்து போச்சே? *(கலைஞர் தனி யாகப் புலம்பிக் கொண் டிருக்கிறார்)*

கற்பனை : **குசும்புராஜ்**





# இளையராஜாவின் வாரிசுகள் எப்படி?

கலாக்ஷேத்ராவின் ஸ்ரீஜித் கிருஷ்ணா, சம்பத்தில் சுஹாஸினி என்ற பெண் நடனக் கலைஞருடன் இணைந்து, ஹிந்தி பஜன்களை பிரபல பாடகர் ஓ.எஸ்.அருணைப் பாடச் சொல்லி நடன நிகழ்ச்சியாக வழங்கினார். பிரபல துளஸிதாஸ், மீரா பஜன்களுக்கிடையே ஜதிகளை உருவச் செய்து பரதநாட்டியமாக்கிப் பரிசோதனை நிகழ்த்தினார். பொதுவாக பஜனைகளின் உச்சகட்டத்தில் பக்தர்கள் வேகம் கொண்டு ஆடும் நடனமல்ல இது. அபிநயங்களும், பாதங்களின் வேலையும் இணைந்திருந்தாலும் நிகழ்ச்சியில் சுறுசுறுப்பு கொஞ்சம் குறைவுதான். மேடையில் மூன்றாவதாகவும் ஒரு நடனக் கலைஞர் இருந்தார்; ஓ.எஸ். அருண்தான்! அவர் பாடும்போதே பலவித பாவங்களுடன் அபிநயங்கள் பிடித்து அசத்திவிட்டார். ஆகவே இது மூன்று பேர் இணைந்து வழங்கிய நிகழ்ச்சி!

வண்ண வண்ணப் பருத்திச் சேலைகளில், பின்னி பூச்சூடி 'பனிச்'சென்று இதுபோன்ற நிகழ்ச்சிகளுக்கு வரும் பல பரதம் கற்கும் இளமங்கையர் மற்றொரு சிறப்பம்சம்.

வயலின் சகோதரர்கள் கணேஷ் - குமரேஷ் புதுமை விரும்பிகள். தத்வாலோகாவும், அமெரிக்காவைச் சேர்ந்த கலாலயாவும் இணைந்து வழங்கிய 'காற்றினிலே வரும் கீதம்' நிகழ்ச்சியில் இந்த இருவரும் விறுவிறுப்பாக இசைத்த ஜனரஞ்ஜனி 'ராகப் பிரவாகம்' ஒரு புதுமைப் பிரவேசம். கர்நாடக இசையின் சுரங்களை மேற்கத்திய இசை வடிவில் வரும் வகையில், அதேசமயம் இசையை இம்சையாக்காமல் வாசித்த இருவருக்கும் கூட்டத்திலிருந்து 'சபாஷ்... சபாஷ்' என்ற குரல்கள் எழுந்த வண்ணம் இருந்தன.

ராஜாவின் இளைய தலைமுறை யுவன்சங்கரும், கார்த்திக்கும் இசையை எப்படிக் கையாண்டு இருக்கிறார்கள் என்று அறிய 'அழகாய் இருக்கிறாய், பயமாய் இருக்கிறது', 'மெர்க்குரிப் பூக்கள்' பாடல்களைக் கேட்டேன்.

இரண்டு படங்களிலும் தலா ஐந்து பாடல்கள். இரண்டிலும் ஒரு பாடல் இரண்டு தடவை ஒலிக்கிறது. முக்கியமான விஷயம் 'அஇபஇ'யின் ஐந்து பாடல்களை பதினேழு குரல்களும், 'மெ.பூ'ல் பதினான்கு குரல்களும் பாடி உள்ளன. யார் யார் எந்தப் பாடல் என்று கேட்கிறீர்களா? அநாவசியம். முகமும் இல்லை; முகவரியும் இல்லை. ஓசைதான் அதிகம், இசை கம்மி. அதிலும் 'காதலை' என்ற பாடலில் (பேச்சில்?) பதினொரு பேர் பங்கு பெற்றுள்ளனர்! 'அஇபஇ' ஒலிநாடாவில் உருப்படியாக இருப்பது 'தீம் ம்யூஸிக்' தான். எய்ட்ஸ், HIV,, காண்டம் எல்லாம் பாடல் வரிகளில் வர ஆரம்பித்துவிட்டன. ஜாக்கிரதை! 'மெர்க்குரிப் பூக்கள்' கார்த்திக்கின் இசையில் ஒரு பாடல் மட்டும் இலேசாக இனிக்கிறது. 'சொல்ல வார்த்தைகள் இல்லை'; இதில் இரண்டாவது முறையில் கார்த்திக்ராஜாவின் குரல் இளையராஜாவை நினைவுபடுத்துகிறது. மற்ற பாடல்கள்? களேபரம்தான்.

- ஜோதிஸ்வரூபிணி

சூப்பர்ஹிட் இசையைத் தந்த ஓர் இளம் இசையமைப்பாளருக்கு, தமிழ்ப் பட உலகில் உடனடியாக ஒரு வாய்ப்புக்கூட இல்லை. ஆனால் ஆங்கிலப் படத்துக்கு இசையமைக்கும் வாய்ப்பு அவரைத் தேடி வந்திருக்கிறது!

'சித்திரம் பேசுதடி' படத்தில் 'வாள மீனுக்கும் விலாங்கு மீனுக்கும் கல்யாணம்' பாடலுக்கு உயிர் கொடுத்த சுந்தர் சி. பாபு, 'மகோத்ஸவ்' எனும் ஆங்கிலப் படத்துக்குச் சுடச்சுட இசையமைத்துக் கொண்டிருக்கிறார். இது தவிர மலையாளத்தில் 'சாக்கோ இரண்டாமன்', தெலுங்கில் 'அருந்ததி' என தமிழ் நாட்டுக்கு வெளியே வாய்ப்புகள் குவிந்தாலும், தமிழ்த் திரையுலகம் தன்னை சட்டை செய்யாததில் துளியும் வருத்தமில்லாமல் தமது மெட்டுக்களோடு காத்திருக்கும் இவர், வீணை சிட்டிபாபுவின் மகன்.




"சிறுவயதிலிருந்தே எனக்கு இசையில் ஆர்வம் இருந்தது. ஆனால் அப்பாவுக்கு நான் வீணை வித்வானாவதில் விருப்பமில்லை. பிறகு என்னுடைய விருப்பத்தைப் புரிந்துகொண்டு, நான் பியானோ வாசிப்பதற்கு ஊக்கமளித்தார். எனது இசை இப்போது பட்டிதொட்டியெல்லாம் ஒலிக்கும்போது அதைக் கேட்பதற்கு அப்பா இல்லை" என்று வருந்துகிற சுந்தர் சி. பாபு, ஏ.ஆர். ரஹ்மானின் தோழர். காலம் சென்ற இசையமைப்பாளர் மகேஷிடம் பல படங்களுக்கு உதவியாளராகப் பணிபுரிந்திருக்கிறார்.

'சித்திரம் பேசுதடி' படத்துக்கு இசையமைக்கும் வாய்ப்பு இவருக்கு எப்படிக் கிடைத்தது?

"எனது நண்பர் மூலமாக மிஷ்கினின் நட்பு கிடைத்தது. முதல் சந்திப்பிலேயே ஒரு சிச்சுவேஷனைச் சொல்லி ட்யூன் கேட்டார். அப்படி அவர் சொன்ன சிச்சுவேஷன் 'பட்டாம்பூச்சி' பாடல். அடுத்தநாளே அந்தப் பாடலுக்கு நான் ட்யூன் கொடுத்தேன். முதல் ட்யூனே அவருக்குப் பிடித்துவிட்டது. 'நீங்க தான் இசையமைப்பாளர்' என்று அந்த நிமிஷமே சொல்லிவிட்டார். ஏதோ மிராக்கிள் நடந்தமாதிரி இருக்கு" என்றவர், வாளமீன் கானா பாடலைச் செதுக்கிய ரகசியம் சொல்கிறார்.

"இந்தப் படத்துக்காக ஒரு வருடம் கடினமாக உழைத்தேன். படத்துக்காக போட்ட எட்டு ட்யூன்களில் ஆறு ஓ.கே. ஆனது. பாடல்கள் தவிர ஆறு தீம் மியூசிக் அமைத்தேன். கானா பாடகர் உலகநாதன் வான மீன் பாடலோடு வந்தார். அதில் பல திருத்தங்களைச் செய்து, குழந்தைகளும் ரசிக்கக்கூடிய அளவில், தனி ஸ்டைலில் இசையமைத்தேன்" எனும் சுந்தர் சி. பாபு, 'சித்திரம் பேசுதடி' படத்தில் எங்கேயும் வீணை இசையைப் பயன்படுத்தவில்லை.

- ஜெய்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.